தமிழ்க்கல்வி, சைவ சித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத் தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக் காகவும் பொதுஜனங்களின் அநுகூலத்துக்காகவும்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்களாக இருபதாம் பட்டத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள்**

மனமுவந்து அமைத்திருக்கும்

# பேரறக் கட்டளைகள்



I. ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளை (1944-ஆம் ௵ அண்ணாமலை சர்வகலாசாலை யாருடைய அங்கீகாரம் பெற்றது.)

சைவசித்தாந்த சாஸ்திரங்களின் பயிற்சி பெருகும்பொருட்டு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாக 1944-ஆம் வருஷம் ஏற்படுத்தியது. இதன் மூலதனம் ரூ. 15,000 ஸர்க்கார்க் கடன் பத்திரமாகவுள்ளது.

2. இதன் வட்டித் தொகையிலிருந்து அலகாபாத் சர்வகலா சாலையிலும், காசி ஹிந்து சர்வ கலாசாலையிலும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்கள் சம்மதத்தின்மேல் வேறு சர்வ கலாசாலைகளில் உபந்நியாசங்கள் செய்யும்பொருட்டு மாற்றினாலன்றி ஆண்டு தோறும் நான்குக்குக் குறையாத உபந்நியாசங்களுக்கு ரூ. 400 சம்மானம் அளிக்க வேண்டும்; சம்மானத் தொகை போக மிஞ்சுவதை மூலதனத்தோடு சேர்க்கவேண்டும்.

3. எந்த வருஷத்திலேனும் ஸிண்டிகேட்டார் உபந்நியாசம் செய்யத் தகுதியுள்ளவர்களில்லையென்று கருதினால் அதனால் கொடுபடாமல் சேரும் தொகை மூலதனத்துடன் சேர்க்கப்படவேண்டும்.

4. நான்கு உபந்நியாசங்களுள் மூன்று காசி ஹிந்து சர்வகலா சாலையிலும், ஒன்று அலகபாத்து சர்வகலாசாலையிலும் சர்வகலாசாலையார் குறிப்பிடும் இடங்களில் செய்யவேண்டும். உபந்நியாசம் சைவ

சித்தாந்தத்தின் கொள்கைகளை விவரமாக விளக்கக்கூடியவராய் இருக்கவேண்டும். அண்ணாமலை சர்வகலாசாலையின் ஸிண்டிகேட்டார் தம் சர்வகலாசாலையிலுள்ள ஹிந்து ஆசிரியர்களையோ சைவ சித்தாந்த சாஸ்திரத்தில் நல்ல பயிற்சியுள்ள வேறு ஹிந்துக்களையோ உபந்நியாசகராக ஆண்டுதோறும் நியமிப்பார்கள். ஒரு வருஷம் உபந்நியாசம் செய்தவர் 12 வருஷங்களுக்குப் பிறகே இரண்டாம் முறை உபந்நியாசம் செய்ய வரலாம். உபந்நியாசகர் எந்த ஜாதியினராகவோ ஆண்பாலராகவோ பெண்பாலராகவோ இருக்கலாம். உபந்நியாசங்கள் செய்த ஒரு மாதத்திற்குள், உபந்நியாசங்களை அண்ணாமலை சர்வகலாசாலைக்கும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் அனுப்பவேண்டும். ஸிண்டிகேட்டாருடைய நோக்கம்போல் சர்வகலாசாலையார் இந்த உபந்நியாசங்களை அச்சிட்டு வெளியிடலாம்.

5. சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என்னும் இவற்றின் சூத்திரங்களிலும், இவற்றிற்குரிய அறுவர் உரைகளிலும், ஸ்ரீ உமாபதி சிவாசாரியாருடைய சிவப்பிரகாசத்திலும் ஆழ்ந்த பயிற்சியும் ஆராய்ச்சியும் இருத்தலை உபந்நியாசங்கள் காட்டவேண்டும்.

6. காசி ஹிந்து சர்வகலாசாலையாரையும் அலகாபாத்து சர்வகலாசாலையாரையும் கலந்துகொண்டு தசரா விடுமுறைக்கு முன்போ பின்போ உபந்நியாசங்களை நடத்த ஏற்பாடு செய்யவேண்டும்.

7. உபந்நியாசங்களை முடித்துவிட்டு உபந்நியாசகர் திரும்புகையில் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் அபிஷேகத்துக்காக ஒரு குடம் கங்கா தீர்த்தத்தைக் கொண்டு வருவதோடு அந்த விவரத்தை இந்தத் தருமஸ்தாபகரவர்களுக்கு உபந்நியாசப் பிரதி அனுப்பும்பொழுது தெரிவிக்கவேண்டும்.

8. சம்மானம் ரொக்கமாகவோ உண்டியல் மூலமாகவோ அளிக்கப்படும். ஒவ்வொரு வருஷ முடிவிலும், உபந்நியாசம் செய்தவருடைய பெயரையும் விலாசத்தையும் சம்மானத் தொகையையும் எந்த வருஷத்திலேனும் உபந்நியாசம் நடைபெறாவிட்டால் சேர்ந்திருக்கும் தொகையையும் ஸிண்டிகேட்டார் தெரிவிக்கவேண்டும். கணக்குகளைப் பிரபலமான தினசரி ஆங்கிலப் பத்திரிகையிலோ தமிழ்ப் பத்திரிகையிலோ பிரசுரிக்க வேண்டும். வருஷந்தோறும் மிச்சப்படக்கூடிய வட்டித் தொகையையும் இப்போது வட்டிக்குக் கொடுத்திருக்கும் மூலதனத்தை ஒருவேளை கவர்ன்மெண்டார் திருப்பிக்கொடுத்தால் அதையும் வேறு நம்பிக்கையான இனங்களில் வட்டிக்கு அண்ணாமலை சர்வகலாசாலை ஸிண்டிகேட்டார் போடவேண்டும். வட்டிக்கு விடுவதில் மதிப்பு அதிகமாகி அதிக வரு

மானம் ஏற்பட்டால் வேறு சர்வகலாசாலை ஸ்தலங்களில் உபந்நியாசங்களை ஏற்படுத்தி அந்த உபந்நியாசங்களுக்கு ஸம்மானம் அளிக்க அந்த வருமானத்தை உபயோகிக்கலாம்.

II. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகக் கும்பகோணம் முனிஸிபல் எல்லைக்குள் கோட்டையூரில் ஒரு லோயர் ஸெகண்டரி பாடசாலை. இதனை அமைக்க 1945-ஆ பிப்ரவரி மாதத்தில் ஏற்படுத்திய மூலதனம் ரூ. 11,500. இந்தத் தொகையில் ரூ. 10,000, 3½% வட்டியுள்ள சர்க்கார் கடன் பத்திரமாகவும், ரூ. 1500 ரொக்கமாகவும் உள்ளன.

முதல் மூன்று பாரங்களையோ, அல்லது அவற்றிற்குச் சமமான வகுப்புக்களையோ கொண்ட ஒரு பாடசாலையை நடத்தக் கும்பகோணம் நகர பரிபாலன சபையார் வசம் ரூ. 10,000 இருக்கும். அவர்கள் அதனைப் பரிபாலித்து வட்டியைக் கொண்டு பாடசாலையை நடத்தவேண்டும். இந்தத் தொகையை வேறு காரியத்திற்கு உபயோகப்படுத்தலாகாது. 1947-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதிக்குள் பாடசாலையை ஆரம்பிக்காவிட்டால் மூலதனத்தையும் அந்தத் தேதிவரை சேர்ந்திருக்கும் வட்டித் தொகையையும் சேர்ந்து இந்தத் தருமஸ்தாபகர்களிடமாவது, அவர்கள் வார்சுகளிடமாவது முனிஸிபாலிடியார் சேர்ப்பிக்க வேண்டும்.

2. ரொக்கமாகவுள்ள ரூ. 1,500-ஐ முனிஸிபாலிடியார் பள்ளிக்கூடம் கட்டுவதற்காக ஒரு மனையை வாங்க உபயோகிக்கவேண்டும். பள்ளிக்கூடம் அந்தக் கட்டிடத்தில் நடைபெறவேண்டும். மூன்று வருஷங்களுக்குள்ளாகவோ யுத்தம் முடிந்த உசிதமான ஒரு காலத்திற்குள்ளாகவோ கட்டிடத்தைக் கட்ட ஆரம்பிக்கவேண்டும்.

3. குறிப்பிட்ட காலத்திற்குள் அவ்வாறு செய்யாவிட்டால் இந்த ரூ. 1500-ம் தருமஸ்தாபகரவர்களையோ அவர்கள் வார்சுகளையோ சார்ந்துவிடும்.

4. பள்ளிக்கூடத்தின் வருஷ நிருவாக அறிக்கையை முனிஸிபாலிடியார் திருப்பனந்தாள் காசிமடத்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களுக்கு அனுப்பவேண்டும். ஜாஸ்தி வட்டி வரக்கூடிய நம்பிக்கையான நல்ல இனத்தில் இந்த மூலதனமாகிய ரூ. பதினாயிரத்தையும் போட்டுவைக்க நகர பரிபாலன சபையாருக்கு அதிகாரமுண்டு.

III. திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் தேவாரப் பரிசு.

திருவாங்கூர் மஹாராஜாவாகவும், தருமசீலர்களாகவும் தாராள சிந்தையுள்ளவர்களாகவும், பக்திமான்களாகவும், ராவ,

பரிபாலனத்தில் உதாரண புருஷர்களாகவும், திருவாங்கூர் சர்வகலா சாலையின் சான்ஸலராகவும், சீர்திருத்தத்தில் விசேஷ ஊக்கம் உள்ளவர்களாகவும், தமிழ் மொழியிலும் சங்கீதத்திலும் அபிமானமுள்ளவர்களாகவும் விளங்கும் மேன்மை பொருந்திய ஸர் பாலராமவர்மா G.C.S.I.D. Litt., அவர்கள் பெயரால் 1946-ஆம் ௵ ஏப்ரல்மீ௳த்தில் ஏற்படுத்தப்பட்டது இது.

2. தேவாரத்திற் பயிற்சியும், தேர்ச்சியும் திருவாங்கூர் ராஜ்யத்தில் பரவும் பொருட்டு இப்பரிசு ஏற்படுத்தலாயிற்று. இப்பரிசு திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் பெயரால் வழங்கப்பெறும்.

3. இதற்கு ஏற்படுத்திய மூலதனம் ரூ. 5,000. 100-க்கு 3½ வட்டி வரக்கூடிய சர்க்கார்க்கடன் பத்திரமாக உள்ளது. இதனைத் திருவாங்கூர் சர்வகலாசாலையார் பரிபாலித்துவருவர். இதன் வட்டியிலிருந்து வருஷந்தோறும் தேவாரத்தை மிகத் திறமையாக ஓதும் ஒருவருக்கு ரூ. 100 (நூறு) அளிக்கப்படும்.

4. நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை சர்வகலாசாலையார் மூவர் தேவாரங்களிலிருந்து பண்கள் எல்லாம் அமைந்த 75 தேவாரங்களைப் பொறுக்கி எடுத்து அரும்பதவுரையுடன் ஒரு புத்தக ரூபமாக அச்சிட்டு வெளியிட ஏற்பாடு செய்யவேண்டும். அடுத்த நான்கு வருஷங்களில் இவையல்லாத வேறு தேவாரங்களைப் பொறுக்கி எடுக்கவேண்டும்.

5. பரிசுத் தொகை போக மிஞ்சும் தொகையை அப்புத்தகத்தைப் பதிப்பித்து வெளியிட உபயோகிக்கலாம். பரிசுக்காக வருபவர்களுக்கு அப்புத்தகத்தின் பிரதிகளை இலவசமாக வழங்கவேண்டும்.

6. இப்பரிசுப்போட்டிக்குத் திருவனந்தபுரம் சர்வகலாசாலைக்குச் சம்பந்தப்பட்ட காலேஜ்களிலுள்ள மாணுக்கர்கள் ஜாதி வேறுபாடின்றி ஆண்பாலர்களாயினும் பெண்பாலர்களாயினும் அபேட்சகர்களாக வரலாம்.

7. பொறுக்கி எடுத்த 75 தேவாரங்களையும் ஏற்பட்ட பண்களில், பாராமல் நல்ல இசையோடு ஒப்பிக்கக்கூடியவர்களே பரிசுக்கு வரத் தகுதியுள்ளவர்கள்.

8. எந்த வருஷத்திலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுபெறத் தகுதியுடையவர்களென்று கருதப்பட்டால் திருவுளச்சீட்டுப் போட்டு யார் பேருக்குச் சீட்டு விழுகிறதோ அவருக்கே பரிசை வழங்கவேண்டும். சர்வகலாசாலையின் கான்வொகேஷன்

காலத்தில் பரிசு வழங்கப்பெறும். அச்சமயம் பரிசு பெறுபவர் வர முடியாவிட்டால் சர்வகலாசாலையார் அவருக்குப் பரிசுத்தொகையை அனுப்பிவிடலாம். பரிசுக்குரியவர் பரிசு பெறுவதற்குமுன் காலஞ் சென்றுவிட்டால் பரிசுத் தொகை அவருடைய சட்டபூர்வமான வார்சுக்குச் சேர்க்கப்படவேண்டும். ஒருமுறை பரிசுபெற்றவர் மறுமுறை பரிசுபெற அருகரல்லர்.

9. எந்த வருஷத்திலேனும் ஒருவருக்கும் பரிசு வழங்காவிட்டால் அத்தொகை மூலதனத்தோடு சேரும். எந்தக் காலத்திலேனும் மூலதனத்தோடு சேரும் தொகை மிகவும் அதிகரித்தால் சர்வகலாசாலையார் உசிதப்படி பரிசுத் தொகையை அதிகப்படுத்தவோ அதிகமான பரிசுகளை வழங்கவோ ஏற்பாடு செய்யலாம். ஒவ்வொரு வருஷத்திலும் பரிசுபெறுவோருடைய பெயரையும் விலாசத்தையும் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் தெரிவிக்க வேண்டும். கட்டளைத் தொகையை வேறு எந்தக் காரியத்திற்கும் உபயோகப்படுத்தக்கூடாது. இந்தக் கட்டளை திருவனந்தபுரம் சர்வகலாசாலையாருடைய அங்கீகாரத்தைப் பெற்றுள்ளது; 8-4-1946.

IV. சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு. கோச்சி கவர்ன்மெண்டாருடைய அங்கீகாரம் பெற்றுள்ளது. 21—1—1947.

கொச்சி மன்னராகவும், தமிழிற்பெரும் புலவராகவும், சுந்தரமூர்த்தி நாயனாரிடத்துப் பேரன்பு பூண்டவராகவும், அவருடைய பேருதவியாலும் அவருடனும் திருவஞ்சைக்களத்திலிருந்து ஆடிச் சுவாதி நன்னாளில் கைலையை அடைந்து திருக்கைலாய ஞானவுலாவைத் தமிழிலியற்றியவராகவும் விளங்கிய சேரமான் பெருமாள் நாயனார் ஞாபகார்த்தமாக இப்பரிசு அமைக்கப்பட்டது. சுந்தரமூர்த்தி நாயனாருடைய தேவாரப் பயிற்சியும் தேர்ச்சியும் கொச்சி ராஜ்யத்தில் பரவும்பொருட்டுச் சேரமான் பெருமாள் நாயனார் பேரால் இது நிறுவலாயிற்று.

2. இதற்கு ஏற்பட்ட மூலதனம் ரூ. 5,000. கொச்சி அரசாங்கத்தார் நியமிக்கும் ஒரு சபையார் இந்த மூலதனத்தைப் பரிபாலிப்பார்கள். மேற்படி சபையில் காலேஜ் தலைவர்கள் இருப்பார்கள். அந்த ராஜ்யத்திலுள்ள கல்வியிலாகா தலைமை அதிகாரியே அச் சபைக்குத் தலைவராக இருப்பார். அப்போதைக்கப்போது ஷை சபையார் மூலதனத்தை, வட்டி அதிகமாக வரக்கூடிய வேறு இனங்களிற் போடலாம். அந்த வட்டித் தொகையிலிருந்து ரூபாய் 100 மிகவும் திறமையாகத் தேவாரம் ஓதும் ஒருவருக்கு ரொக்கமாக வழங்கப்பெறும்.

3. நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை அச்சபையார் சுந்தரர் தேவாரத்திலிருந்து பண்கள் எல்லாம் அமைந்த ஐம்பது தேவாரப் பாசுரங்களைப் பொறுக்கி எடுத்து அரும்பதவுரையோடு புத்தகமாக வெளியிடவேண்டும். பொறுக்கி எடுக்கும் பாசுரங்கள் நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை மாறும். ஆனால் ஒவ்வொரு முறையிலும் "பித்தா", "தானெனை" என்னும் பதிகங்கள் விடாமல் சேர்ந்திருக்க வேண்டும். பதிப்பின் செலவிற்கு, பரிசுத்தொகை நூறு ரூபாய் போக வட்டியில் மிஞ்சும் தொகையிலிருந்து எடுத்துக்கொள்ளலாம். காலேஜில் படிக்கும் ஹிந்துக்களே ஆண்பாலராயினும் பெண்பாலராயினும் பரிசுக்குவர உரியவர்கள். பொறுக்கியெடுத்துப் பதிப்பித்த பிரதிகள் பரிசுக்கு வருபவர்களுக்கு இலவசமாக வழங்கப்பெறும்.

4. தமிழில் ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பண்ணோடு நல்ல இசையில் பாராமல் ஒப்பிக்கக் கூடியவர்களே இந்தப் பரிசுக்கு வரத் தகுதியுள்ளவர்கள். மேலே சொன்ன சபையாரே பரீக்ஷையை நடத்துவார்கள்.

5. பரீக்ஷை இரண்டு பிரிவுகளையுடையது; (1) பொறுக்கி எடுத்த ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பாராமல் ஒப்பித்துப் பாசுரங்களின் பொருளையும் தாற்பரியத்தையும் தெரிவித்தல்; இதற்குரிய அம்சம் 50; (2) பொறுக்கி எடுத்த ஐம்பது தேவாரப் பாசுரங்களிலிருந்து குறிப்பிடும் எவற்றையேனும் நல்ல இசையுடன் உரிய பண்களில் பாசுரங்களின் பொருள் நன்றாக விளங்கும்படி பாடுதல்; இதற்குரிய அம்சம் 50; எவர் அதிக அம்சங்களைப் பெறுகிறாரோ அவரையே பரிசுக்குரியவரென்று அச்சபையார் நிச்சயிப்பர்.

6. எந்த வருஷத்திலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுக்குத்தக்கவரென்று கருதப்பட்டால் திருவுளச்சீட்டுப் போட்டு அதில் எவர் பெயர் அகப்படுகிறதோ அவரே பரிசுக்குரியவரென்று நிச்சயிக்கப்படுவர். ஒருமுறை பரிசுபெறுபவர் மறுமுறை பரிசுப் போட்டிக்கு வர அருகரல்லர்.

7. திருவஞ்சைக்களத்திலுள்ள சிவாலயத்தில் சுந்தரர், சேரமான் பெருமாள் சந்நிதியில் ஆடிச்சுவாதி விழா நடக்கையில் பரிசு வழங்கப்படும்.

8. எந்த வருஷத்திலேனும் பரிசுக்குரியவர் வரமுடியாமல் இறந்து போய்விட்டால் பரிசுத்தொகை அவருடைய சட்டபூர்வமான வார்சுக்குக் கொடுக்கப்படும். பரிசு பெறுபவர் நேரில் வர இயலாவிட்டால் பரிசுத் தொகை அவரிருப்பிடத்துக்கு அனுப்பப் பெறும்.

V. மூவர் தேவாரப் பரிசு. இதற்கு ஏற்படுத்திய மூலதனம் ரூ. 10,000.

தென்னிந்தியாவில் விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் மூன்று நாயன்மார்களுடைய தேவாரங்களையும் பயில்வதை ஊக்குவதற்கும் அதனால் தெய்வ பக்தியை மக்களிடையே எழுப்பி அவர்களை நன்மக்களாகச் செய்வதற்கும் இப் பரிசு அமைக்கப்பட்டது. அந் நாயன்மார் மூவரும் பரம்பொருளைப் புகழ்வனவும் பக்திச்சுவை மிக்கனவும் ஆகியபாடல்களால் இந்நாட்டை அலங்கரித்தும், ஸ்தல யாத்திரை செய்தும், எலும்பைப் பெண்ணாக்கியதும் கல்லைத் தெப்பமாக மிதப்பித்ததும் முதலையுண்ட பாலனை அழைத்ததும் இவைபோன்ற பிறவுமான அற்புதச் செயல்கள் புரிந்தும் மக்களின் முன்னேற்றத்திற்கு உழைத்துள்ளார்கள்.

2. இக்கட்டளைத் தொகை ரூ. 10,000 பெறுமானமுள்ள சர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக உள்ளது. இதன் பரிபாலனம் திருப்பனந்தாளிலுள்ள காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் நிதியை நிர்வகிக்கும் கமிட்டியார் வசம் இருக்கும்.

3. மூலதனத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூ. 200 சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் முக்கியமான இடங்களிலிருந்து பரிசுபெறுபவர் ஒவ்வொருவருக்கும் ரூ. 50 வீதம் பரிசு அளிக்க உபயோகப்படும். எஞ்சிய வட்டித்தொகை தேவாரத்திரட்டை அச்சிடுவது முதலிய செலவுகளுக்கும் பரிசுக்கு முதல் மூன்று ஊர்களிலிருந்து வருபவர்களுடைய பிரயாணச் செலவுக்கும் உபயோகிக்கப்படவேண்டும். செலவாகாமல் மிஞ்சிய தொகை மூலதனத்தோடு சேர்க்கப்படவேண்டும்.

4. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களிலுள்ள ஹைஸ்கூல்களில், 4, 5, 6-ஆம் பாரங்களிலோ அவற்றுக்குச் சமமாக அமைக்கப்படும் வேறு எந்த வகுப்புகளிலோ படிக்கும் மாணாக்கர்களும், திருப்பனந்தாள் காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் யூனிவர்ஸிடி பரீக்ஷைக்குப் படிக்கும் மாணவர்களும் இப்பரிசுப் போட்டிக்குவரத் தகுதியுடையவர்கள். அவர்கள் கமிட்டியாரால் வெளியிடப்படும் புத்தகத்திலுள்ள தேவாரங்களிலிருந்து, ஒவ்வொரு பதிகத்திற்கும் குறைந்தது ஒரு பாசுரம் வீதம் ஒவ்வொரு நாயனார் தேவாரத்திலிருந்தும் 15 பாசுரங்களுக்குக் குறையாமல் மொத்தம் 50 பாசுரங்களை மனப்பாடம் பண்ணிச் சரியான பண்ணோடு நல்ல இசையில் பாடவேண்டும்.

5. பரிசு அளிப்பதற்குரிய விதிகள் வருமாறு :—

(a) பரிசுப் போட்டிக்கு ஜாதி வேற்றுமை யில்லாமல், ஆண் பாலாரும் பெண்பாலாரும் வரலாம்.

(b) பரிசுப் போட்டிக்கு வருவோர் மேலே 4-ஆம் பாராவில் சொல்லியபடி வெளியிடப்பட்ட தேவாரங்களின் தாற்பரியம் விளங்க அவற்றை மனப்பாடம் பண்ணிச் சரியான பண்ணோடு பாடவேண்டும்.

(c) அபேட்சகர்கள் தத்தம் விண்ணப்பங்களைத் தத்தம் கலா சாலைத் தலைமையாசிரியர் மூலமாக ஒவ்வொரு வருஷமும் ஜூலை 31உக்குள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபாலவர்களுக்கு அனுப்பவேண்டும்.

(d) சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் ஊர்களிலுள்ள கலாசாலை யதிகாரிகள் தத்தம் கலாசாலைகளில் ஒரு பூர்வாங்கப் பரீக்ஷையை நடத்தி, ஒரு கலாசாலை யிருந்தால் மூவரையும், ஒன்றுக்கு மேற்பட்ட கலாசாலைகள் இருந்தால் அவற்றிலிருந்து மொத்தமாக நால்வரையும் பொறுக்கி எடுத்து, ஒவ்வொரு வருஷமும் டிஸம்பர் மாதத்திற் குறிப்பிட்ட ஒரு தேதிக்குள் திருப்பனந்தாளுக்கு அனுப்பவேண்டும். செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபாலும் கமிட்டியாரால் நியமிக்கப்படும் அவருடைய உதவியாசிரியர்கள் இருவரும் சேர்ந்து பொறுக்கி அனுப்பப்பட்டவர்களுக்கு முடிவுப் பரீக்ஷையை நடத்திப் பரிசுக்குத் தகுதியுள்ள சிறந்தவர் ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தீர்மானிக்கப்படுவர்.

(e) செந்தமிழ்க் கல்லூரி மாணவர்களைப் பரீக்ஷிக்க முடிவுப் பரீக்ஷைக்கு நியமிக்கப்படும் உதவியாசிரியர் இருவரும் பூர்வாங்கப் பரீக்ஷைக்கு நியமிக்கப்பட்டவரல்லாத அன்னியராக இருக்க வேண்டும்.

முக்கியக் குறிப்பு :—ஏதேனும் ஒரு காரணத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட அபேட்சகர்கள் திருப்பனந்தாளில் நடைபெறும் முடிவுப் பரீக்ஷைக்கு வரத் தவறினால் பரிசுத் தொகையும் மூல தனத்தோடு சேர்க்கப்படவேண்டும்.

(f) ஒருமுறை பரிசு பெற்றவர் மறுமுறை பரிசுப் போட்டிக்கு வர அருகரல்லர்.

(g) செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபால், தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் பரீக்ஷையின் முடிவுகளைத் தெரிவிக்கவேண்டும்.

6. பரிசு பெறுவோருக்குரிய பரிசுத்தொகையைக் கமிட்டியார் பரிசு பெறுவோர் பெயரால் உண்டியல்களாகச் சம்பந்தப்பட்ட அவ்வக் கலாசாலை யதிகாரிகளுக்கு அனுப்புவார்கள்.

7. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களி லிருந்து போட்டிக்கு வருபவர்களுக்கு (ஒரு கலாசாலை இருந்தால் மூவருக்கும், ஒன்றுக்கு மேற்பட்டவை இருந்தால் நால்வருக்கும்) திருப்பனந்தாளுக்கு வந்து போவதற்குரிய செலவு ஒவ்வொருவருக்கும் ரூ. 4 வீதம் அளிக்கப்படும். (மேலேயுள்ள 5-d பாராவைப் பார்க்க.)

8. மூலதனத்தின் வரவு செலவுகளுக்குக் கமிட்டியார் ஒழுங்கான கணக்கு வைத்திருக்கவேண்டும். பரிசுகளும், வெளியூரிலிருந்து வருவோருக்குப் பிரயாணச் செலவுகளும் கொடுத்த பிறகு மிஞ்சும் தொகையைக் கமிட்டியார், பரிசுக்கு வருவோருக்கு உதவுவதற்காக மூவர் தேவாரத்திலிருந்தும் பொறுக்கி எடுக்கப்படும் பாசுரங்களைப் புத்தகமாக அச்சிடுவதற்கு உபயோகிக்கலாம்.

ஒவ்வொரு வருஷத்திலும் பரிசு பெறுவோர் பெயர்களையும் அளிக்கப்பட்ட பரிசுத் தொகையையும் பிரபலமான இங்கிலீஷ், தமிழ்த் தினசரிகளில் வெளியிடவேண்டும். வருஷத்து வரவு செலவு முழுவதும் அடங்கிய கணக்கு தருமஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் சேர்ப்பிக்கப்பட வேண்டும்.

9. கட்டளைத் தொகையை ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தலாகாது.

## IV. காசி ஹிந்து ஸர்வகலாசாலைக்கு அளித்த சைவ சித்தாந்தக் கட்டளை ரூ. 60,000.

காசியில் காசிமடத்தை ஸ்தாபித்த மூல புருஷராகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர ஸ்வாமிகள் ஞாபகார்த்தமாகச் சைவ சித்தாந்த சாஸ்திரத்தில் ஒரு பேராசிரியர் ஸ்தானத்தை அமைப்பதற்காக 1946-ஆம் வருஷம் ஜனவரி மாதம் ஏற்பட்டது இது.

இந்த மூலதனமாகிய ரூ. 60,000-த்தைச் சர்வகலாசாலையார் $3\frac{1}{2}$ சத விகிதம் வட்டி வரக்கூடிய சர்க்காரப் பத்திரங்களாகப் போட்டுவைக்க வேண்டும்.

2. இந்தக் கட்டளையின் பரிபாலனம் காசி ஹிந்து சர்வகலாசாலையாரைச் சேர்ந்தது.

3. எந்தச் சர்வகலாசாலையிலேனும் டிகிரிபெற்றுத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பயிற்சியுற்றுத் தமிழிலும் சைவ சித்தாந்தத்திலும் ஆசிரியராக இருக்கத் தகுதியுள்ள ஒருவரைச் சர்வகலாசாலையார் ஷை ஸ்தானத்துக்கு நியமிக்கவேண்டும். அவர் சைவசித்தாந்தத்தில் அழுத்தமான பற்றுடையவராகவும் அதைப்பற்றிக் காலேஜ் மாண வர்களுக்குத் தமிழில் உபந்நியாசம் செய்யக்கூடிய திறமையுடைய வராகவும் இருக்கவேண்டும்.

4. கட்டளைத் தொகையின் வருஷ வட்டியிலிருந்து இரண்டா யிரத்துக்கு மேற்படாத ஒரு தொகையைப் பேராசிரியருடைய சம் பளத்துக்கு உபயோகிக்கவேண்டும்.

5. சம்பளம் போக எஞ்சிய வட்டித் தொகை மூலதனம் ஒரு லக்ஷம் ரூபாய் ஆகும் வரையில் மூலதனத்தோடு சேர்க்கப்படும். அதன் பிறகு சர்வகலாசாலையாருடைய உசிதப்படி பேராசிரிய ருடைய சம்பளத்திற்கு ரூ. 2000-க்கு மேற்பட்ட தொகையை உப யோகிக்கலாம். அப்பாலும் தொகை மிகுதிப்பட்டால் சைவசித் தாந்த சாஸ்திரம் சம்பந்தமான புத்தகங்களைக் தமிழிலும், ஹிந்தி யிலும், இங்கிலீஷிலும் அச்சிட்டு அவற்றை இலவசமாக எல்லாச் சர்வகலாசாலையாருக்கும் விநியோகிக்கலாம். மேற்படி நூலில் ஐந்து பிரதிகள் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சு களுக்கும் அனுப்பப்பெற வேண்டும்.

எப்போதாவது ஸர்க்கார் கடன் பத்திரத் தொகையையும் பின் சேர்ந்த தொகையையும் திரும்பக் கொடுத்தால், ஜாஸ்தி வரக்கூடிய ஸர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக மாற்றிக்கொள்ள ஸர்வகலாசாலை யாருக்கு அதிகாரமுண்டு.

6. வருஷந்தோறும் நடைபெற்ற வேலைகளின் விவரத்தையும் வரவுசெலவுக் கணக்குகளையும் தருமஸ்தாபகரவர்களுக்கோ அவர்கள் வார்சுகளுக்கோ அனுப்பவேண்டும்.

7. இந்தக் கட்டளைத் தொகையைத் தருமஸ்தாபகரவர்க ளுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் உப யோகப் படுத்தலாகாது.

இந்தக் கட்டளை காசி ஸர்வகலாசாலையாரால் 28-1-46ல் அங்கீ கரிக்கப் பெற்றுள்ளது.

VII. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபரஸ்வாமிகள் ஞாப கார்த்தச் சைவசித்தாந்தப் படிப்பின் சம்பள உதவிக் கட்டளை.

Approved by the Syndicate of the Annamalai University on 17-1-'47.

தமிழிற் பெரும்புலமை வாய்ந்தவர்களும் காசி முதல் இராமேசுவரம் வரை தமிழ்க்கலையைப் பரவச்செய்தவர்களும் மொகலாய சக்கரவர்த்தியாகிய ஔரங்கசீப் காலத்தில் 16-ஆம் நூற்றுண்டில் காசியில் காசி மடத்தை ஸ்தாபித்தவர்களுமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபர ஸ்வாமிகளின் நிரந்தர ஞாபகார்த்தமாகச் சைவ சித்தாந்த சாஸ்திரம் பரவுவதைக் கருதி இந்தக் கட்டளை ஏற்பட்டது.

2. இதற்கு ஏற்பட்ட மூலதனம் ரூ. 30,000. இதன் பரிபாலனம் அண்ணாமலைச் சர்வகலாசாலையைச் சேர்ந்தது.

சர்வகலாசாலையார் இந்தத் தொகையை வட்டிவரக் கூடிய சர்க்கார் ஜாமீன் பத்திரங்களிற் போடவேண்டும்.

அண்ணாமலைச் சர்வகலாசாலையிற் படிக்கும் மாணாக்கர்களுக்குக் கீழே கண்ட நிபந்தனைப்படி சம்பள உதவி அளிக்கப்பெறும்.

3. இதன் வட்டித் தொகையிலிருந்து அண்ணாமலைச் சர்வகலாசாலையில் யோக்கியதையுள்ள ஏழை மாணவர் அறுவருக்கு ரூ. 135 வீதம் (மாதந்தோறும் ரூ. 15-ஆக 9 தவணையில்) சம்பள உதவி ஜாதிமத வித்தியாசம் கருதாமல் ஆண்பாலராயினும் பெண்பாலராயினும் அளிக்கப்படும். சைவ சித்தாந்தப் புலவர் வகுப்பில் படிப்பவர்களுக்குச் சம்பள உதவிகள் நான்கு அளிக்கப்படும். மற்ற இரண்டும் காலேஜ் வகுப்பில் படிக்கும் மாணாக்கர்களில் தமிழை இரண்டாம் பாஷையாகவும் சைவசித்தாந்த சாஸ்திரத்தை இஷ்ட பாடமாகவும் எடுத்துக்கொண்டு படிப்பவர்களுக்கு அளிக்கப்படும்.

சம்பள உதவி செய்யும் முதல் வருஷத்திற் புலவர் வகுப்பிலுள்ள இருவருக்கும் காலேஜ் வகுப்பிற் படிப்பவர்களுள் சைவ சித்தாந்த சாஸ்திரத்தை இஷ்டபாடமாக எடுத்துக்கொண்ட ஒருவருக்கும் உதவி அளிக்கப்படும். இரண்டாம் வருஷத்தில் இந்த உதவியைப்பெற இம்மாதிரி மூவர் தேர்ந்தெடுக்கப்பெறுவார்கள். இதனால் இரண்டாம் வருஷம் முதல் வருஷந்தோறும் பண உதவி பெறுபவர் மேலே சொன்னபடி அறுவராவர். சம்பள உதவி இரண்டு வருஷங்களுக்கு உண்டு. அதற்கு மாணாக்கர்களுடைய முதல் வருஷப் படிப்பு திருப்திகரமாக இருப்பதோடு அவர்கள் இரண்டாம் வருஷத்திலும் படிக்க வரவேண்டும்.

4. பண உதவிபெறும் எந்த மாணுக்கரேனும் ஒழுங்கீனமாக நடந்தாலும், ஒழுங்காகப் பாடங்கேட்க வராவிட்டாலும், படிப்பில் தேர்ச்சியைக் காட்டாவிட்டாலும் அவரைப் பண உதவிக்குத் தகுதியற்றவரென்று அதை நிறுத்திவிட வைஸ்சான்ஸலருக்கு அதிகாரம் உண்டு. அவர் ஸ்தானத்தில் தகுதியான வேறு ஒரு மாணுக்கருக்கு இவ்வுதவி செய்யலாம். இவ்விஷயத்தில் வைஸ்சான்ஸலருடைய அபிப்பிராயமே முடிவானது.

5. எந்த வருஷத்திலேனும் பணவுதவி செய்யப்படாவிட்டாலும் சிலகாலம் கொடுத்த பின்பு மாணுக்கர் அதை இழந்துவிட்டாலும் செலவாகாத தொகையும் வட்டியின் மிகுதித் தொகையு மூலம் தனத்தோடு சேர்க்கப்படும்.

6. எந்தக் காலத்திலேனும் முதலில் ஏற்பட்ட மூலதனம் வட்டித் தொகைகளுடன் சேர்ந்து போதிய அளவு அதிகரித்தால் சௌகரியத்துக்குத் தக்கபடி உதவித்தொகையை அதிகப்படுத்தவோ சம்பள உதவிபெறுபவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவோ சர்வகலாசாலையாருக்கு அதிகாரம் உண்டு.

7. மேலே சொன்ன பிரகாரம் தொகை செலவான பிறகு மிச்சம் ஏற்படுமானல் அந்தத் தொகையைச் சைவசித்தாந்தப் படிப்புக்குப் பாடமாக உள்ள சிவஞான சித்தியாரின் பிரதிகளை வாங்கிச் சம்பள உதவி பெறும் மாணுக்கர்களுக்கு இலவசமாக விநியோகிக்கலாம்.

8. ஒவ்வொரு வருஷத்தின் முடிவிலும் வரவுசெலவுக் கணக்குகளையும் சம்பள உதவிபெறும் மாணுக்கர்களின் பெயர்களையும் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் ஸிண்டிகேட்டார் அனுப்பவேண்டும்.

9. மூலதனத்தின் வரும்படியையோ சேரும் தொகைகளையோ ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறுன எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது.

VIII. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் சேந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

சென்னை ஸர்வகலாசாலை ரிஜிஸ்டிராருக்கு 13-6-46-ல் எழுதிக் கொடுத்த ஒப்பந்தப் பத்திரம் (19-6-46-ல் திருவிடைமருதூர், ஸப்-ரிஜிஸ்டிரார் ஆபீஸில் பதிவாகியுள்ளது.)

சென்னைச் சர்வகலாசாலையார் ஏற்படுத்தியுள்ள தனித் தமிழ் (7-D) வித்துவான் பரீக்ஷைக்கு அனுப்பும்படி மாணாக்கர்களைப் பயிற்றுவதற்கு இக்கல்லூரி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத்தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகத் தமிழ் மொழியின் அபிவிருத்தியைக் கருதி அமைக்கப்பெற்றது.

2. இக்கல்லூரி நடைபெறும் பொருட்டுப் பொறுப்பாகக் கொடுக்கப்பெற்ற சொத்து மாயூரம் தாலூகா, நக்கம்பாடி கங்காதரபுரத்து வட்டாரங்களில் கீழையனூர்குடி கிராமத்தில் நன்செய்யும் புன்செய்யும் சேர்ந்து ஏகர் 183, செண்டு 42. இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களுடைய பேரில் பட்டாவாகி அவர்களுடைய ஏகபோக அனுபவத்தில் உள்ளன. இவற்றின் பெறுமானம் ஒன்றரை லக்ஷம் ரூபாயும் வருஷ வரும்படி ரூபாய் எண்ணாயிரமும் ஆகும்.

3. மேற்படி சொத்துக்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களாலும் அவர்கள் வார்சுகளாலும் அனுபவிக்கப்பெறும்.

4. இந்தச் சொத்துக்களிலிருந்து எச்செலவும் போக வரும் நிகர வரும்படி இக்கல்லூரியின் நிர்வாகத்துக்காக நியமிக்கப்பெற்றுள்ள கமிட்டியாரிடம் ஒப்புவிக்கப்படும். அவர்கள் கல்லூரியை நடத்துவதற்கு இத்தொகையை உபயோகித்து வருவதோடு தொகைகளை ஒழுங்கான இனங்களில் ஜாக்கிரதையாக வட்டிக்குப் போட்டு வைக்கவும், கல்லூரி செவ்வையாக நடைபெறுவதற்கு வேண்டிய சமயங்களில் தொகையைப் பயன்படுத்தவும் பொறுப்பாளிகளாவார்.

5. சர்க்கார் கிராண்டு கல்லூரிக்கு ஓர் அதிக வரும்படி. இதையும் மேலே சொன்னவாறு பரிபாலிக்கவேண்டும்.

6. ஆசிரியர்களுடைய சம்பளம், புத்தக சாலையை நடத்தல், கல்லூரியின் கட்டடத்தைப் பாதுகாத்தல் இவை சம்பந்தமாக அவ்வப்போது ஏற்படும் அவசியமான செலவுகளாகிய இவற்றிற்கே மேலே சொன்ன வருஷ வரும்படியை உபயோகிக்க வேண்டும்.

7. கமிட்டியார் வரவு செலவுக் கணக்கை ஒழுங்காக வைத்திருந்து மாதந்தோறும் அதை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களிடம் சேர்ப்பிக்கவேண்டும்.

8. சர்க்கார் கிராண்டு உள்படக் கிடைக்கும் வருஷ வரும்படிக்கு ஏற்றபடி செலவு செய்யவேண்டும். மிச்சம் ஏற்பட்டால்

அதனை, "ரிசர்வ் பண்டு" க்கென்று காற்பங்கைத் தனியே குறிப்பிட்டுச் சர்க்கார் கடன் பத்திரங்களில் போட்டுவைக்கலாம்.

9. சொத்தின் வருஷ வரும்படி கமிட்டியாரிடம் ஒப்பிக்கப் படாவிட்டால் ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கும் நிகர வரும்படியை மட்டும் கமிட்டியார் கேட்டு வாங்கிக்கொள்ளலாம்.

10. மேலே குறிப்பிட்ட சொத்தின் வரும்படியை வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது.

11. எந்தக் காலத்திலேனும் மேலே குறிப்பிட்ட வரும்படிகளுக்கு மேலே செலவு ஏற்படுமானால் கும்பகோணம் தாலுகா மணிக்குடி கிராமத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்கள் பேரால் பட்டாவாகி அவர்கள் அனுபவத்தில் உள்ள எழுபதினாயிரம் ரூபாய் பெறுமானம் உள்ள நன்செய் ஏகர் 61 செண்டு 80, புன்செய் ஏகர் 6செண்டு 49 இவற்றிலிருந்து கிடைக்கும் ரூபாய் 4000 மேற்படி அதிகச் செலவுக்கு உத்தரவாதம் ஆகும்.

IX. இசைத் தமிழ்த் தரும நிதி—ரூ. 1,00,000 ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள நிலங்கள்

இந்தத் தருமம், காசியிலுள்ள ஸ்ரீ காசி மடத்தை ஸ்தாபித்தவரும், 16-ஆவது நூற்றாண்டில் தமிழ் மொழியைக் காசி முதல் இராமேசுவரம் வரை பரவச்செய்தவருமான மாபெருந் தம்பிரானும் சகலகலாவல்லுநருமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபரஸ்வாமிகளின் ஞாபகார்த்தமாக ஸ்தாபிக்கப்பெற்றது. இசைக் கருவிகளுடன் இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதும் அதன் பொருட்டுத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி உயர் வகுப்பு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிப்பதும் இத் தருமத்தின் நோக்கமாகும்.

2. இதற்குவேண்டிய வருமானம் அளிக்கும் சொத்துக்களாகிய சுமார் 200 ஏக்கர்கள் நன்செய், புன்செய் நிலங்களும், மனைகளும், கட்டிடங்களும், ஏத்தக்குடி, பைங்காட்டூர், அக்கரைக்கோட்டகம், குறிச்சி, நல்லூர், வாட்டாறு வட்டம் முதலிய தஞ்சை ஜில்லா மன்னார்குடி தாலுகா கிராமங்களிலிருக்கின்றன; இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பெயரில் பட்டாவுடன் அவர்களது அனுபவத்திலிருப்பவை. சொத்தின் மதிப்பு ஒரு லட்சம் ரூபாய். வருஷ வருமானம் சுமார் ரூ 5000|- (ரூபாய் ஐயாயிரம்.)

3. இந்தச் சொத்துக்கள் இனியும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமி கள் அவர்கள் அனுபவத்திலும், அவர்களுக்குப்பின் வரும் உரிமை யுள்ளவர்களுடைய அனுபவத்திலும் இருந்து வரவேண்டியது.

4. சொத்தின் வருஷாந்தர வரும்படியில் சர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திச் செலவுகள், கிராம சமுதாயம், மராமத்துச் செலவு கள், கிராம தேவதை உத்ஸவச் செலவுகள் முதலியனபோக மிஞ்சும் தொகை கல்லூரி நிர்வாகக் கமிட்டியிடம் ஒப்பிக்கப்பெறும். கமிட்டியார் இவ்வருமானத்தில் 10 சத விகிதத் தொகையை ரிசர்வ் நிதிக்காக ஒதுக்கி, சர்க்கார் ஜாமீன் பாத்திரங்களில் முதலீடுசெய்த பிறகு மீதத் தொகையைக் கீழ்க்குறிப்பிட்ட வீதம் செலவிடுவர். தொகைகளைச் சரிவர நிறைவேற்றுவதற்கு அவ்வப்பொழுது உப யோகப்படும்படி செய்வது கமிட்டியின் பொறுப்பாகும்.

5. உபாத்தியாயர்களின் சம்பளம் சங்கீதக் கருவிகள் வாங்கு வதற்கான செலவுகள், மற்றும் கீழே, ii, iii, iv பாராக்களில் குறிப் பிட்ட செலவுகள், மேலும் ஸ்தாபன நிர்வாகத்திற்கும், இதர நோக் கங்களைப் பூர்த்தி செய்வதற்கும் அவசியமான செலவுகளுமே வரு ஷாந்தர வருமானத்தினின்றும் செலவாகக்கூடிய நியாயமான செலவுகளாகும்.

(i) (a) செந்தமிழ்க் கல்லூரி மாணவர் ஆண், பெண், ஜாதி வகுப்புப் பேதமின்றிப் பயிற்சியில் கலந்துகொள்ள லாம்.

(b) இது சம்பந்தமாக நியமிக்கப்பட்டுள்ள உபாத்தியாயர் கள் உயர்தர வகுப்பு மாணவர்களில் வாய்ப்பாட்டுப் பாடுவதற்குத் தகுதியுடையவர்களையும் தனி வாத்தி யங்கள் வாசிக்கத் தகுதியும் விருப்பமுமுடையவர்களை யும் பொறுக்கி எடுப்பார்.

(c) கல்லூரியின் பாடங்களைப் பாதிக்காமல் தினசரி ஒரு மணி நேரம் இதற்காகச் செலவிடப்படும்.

(d) இசைத்தமிழ் என்பது தேவாரத் திருமுறைகளைப் பண் ஒன்றப் பாடுதலும், மற்றும் தமிழ்ப் பாடல்களை இன் னிசையுடன் பாடுதலும் ஆம்.

(e) இசைக் கருவிகளாவன:—

1. வீணை, 2. தம்புரா, 3. பிடில், 4. ஹார்மோனியம், 5. புல் லாங்குழல், 6. கஞ்சிரா, 7. மிருதங்கம், 8. கடம், 9. ஜலதரங்கம்.

உபாத்தியாயர்கள் வாய்ப்பாட்டிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களுக்கு இசைக் கருவிகளுடன் தமிழ்ப் பாட்டுக்களில் பயிற்சி யளிக்கவேண்டும். இசைக் கருவிகளில் மட்டும் பயிற்சிபெறத் தகுதியுடையவர்களுக்கு அந்த அந்த வாத்தியங்களில் பயிற்சியளிக்க வேண்டும். இசைக் கருவிகளுள் முதல் முதல் மிக அவசியமாகக் கருதப்படும் வாத்தியங்களிலேயே பயிற்சி ஆரம்பிக்க வேண்டும். பயிற்சி முன்னேற்றமடையுங்கால் அவ்வப்பொழுது தேவைக்குத் தகுந்தபடியும் பொருள் நிலைமைக்குத் தகுந்தபடியும் மற்ற வாத்தியங்களிற் பயிற்சி அளிக்கவேண்டும்.

ii. வருஷந்தோறும் ஒரு சஞ்சிகை வெளியிட்டு அதில் வாய்ப்பாட்டிலும் வாத்தியத்திலும் பயிற்சி பெறுபவர்களின் எண்ணிக்கை விவரங்கள், இசை விஷயமாக நிபுணர்களின் ஆராய்ச்சிக்குறிப்புகள், கீழே iv-வது பாராவில் குறிப்பிட்டுள்ள இசைத் தமிழ் மகாநாடு வருஷந்தோறும் கூடுவதுபற்றிய விவரங்கள் முதலியவை அச்சிடப்படும்.

iii. பயிற்சி பெறுவோர்களுக்கு ஊக்கம் தருவதற்காக வருஷந்தோறும் வாய்ப்பாட்டிற்கு ரூ. 50-ம் வாத்தியங்களுக்கு ரூ. 50-ம் ரொக்கப் பரிசு இதற்காக நடைபெறும் போட்டியில் சிறப்பாகத் தேர்ச்சி பெறுபவருக்கு அளிக்கப்படும். இந்தத் தொகை கமிட்டி வசமுள்ள நிதியினின்று செலவிடப்படும்.

iv. இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதற்காக வருஷாந்தர வருமானத்தில் மிகுந்திருக்கும் உபரித் தொகையைக்கொண்டு ஆதி குமாரகுருபர ஸ்வாமிகளின் வருஷ நினைவு விழாவின்போது இசைத் தமிழ் மகாநாடு ஒன்று கூட்டித் தேவாரத் திருமுறைவாணர்களும், இதர தமிழ்ப் பாடல்களில் தேர்ந்த வித்துவான்களும், இசைக்கருவி வல்லுநர்களும் மகாநாட்டிற்கு வருவிக்கப் பெற்று இசையரங்கு நடத்தப்பெறும்.

6. மேலே 5-வது பாராவில் கண்ட விஷயங்களுக்காகச் செலவானபின் வருமானத்தில் மிச்சமிருந்தால், சங்கீதப் பயிற்சிபெற்று வரும் மாணவர்களில் தகுதி பெற்றவருக்கு உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்படும். இந்த உபகாரச் சம்பளங்கள் மாதந்தோறும் ரூ. 10 முதல் ரூ. 15 வரையில் வருஷத்திற்கு 10 மாதங்களுக்கு அளிக்கப்படும்.

7. மேலே 4-வது பாராவில் குறித்தபடி சொத்தின் வருஷாந்தர வருமானம் கமிட்டியின் வசம் ஒப்பிக்கப்படாவிட்டால் மேலே

குறித்த ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கக்கூடிய நிகர வருஷ வருமானத்தை மட்டுமே பெறக் கமிட்டிக்கு உரிமையுண்டு.

8. வரவுசெலவு சம்பந்தமான கணக்குகளை ஒழுங்காக எழுதி மாதந்தோறும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பார்வைக்கு அனுப்புவது கமிட்டியின் பொறுப்பு.

9. இந்தத் தருமத்தின் ஸ்தாபகர் அவர்கள் நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்காகவும் தருமத்தின் வருமானம் செலவிடப்படமாட்டாது.

இது மதராஸ் கல்வியிலாகாத் தலைவரது 17-2-47 தேதியிட்ட நெ. ஆர். ஸி. 114 of 47 கடிதப்படி அங்கீகாரம் பெற்றிருக்கிறது.

இது சம்பந்தமான பத்திரம் 16-5-48ல் மன்னார்குடி சப்ரிஜிஸ்திரார் ஆபீசில் 1-வது புத்தகம் 931-வது வால்யூம், 99 முதல் 109 பக்கங்களில் 1947-ம் வருஷத்து 1432-ஆம் நம்பர் தஸ்தாவேஜாக ரிஜிஸ்தர் செய்யப்பெற்றுள்ளது.

X. கால்நடை வைத்தியசாலை : மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் ஸ்காலர்ஷிப். 1947-ம் வருஷம் ஜூன் மாதம் 28-ந்தேதி எழுதிவைத்த டிரஸ்டு செட்டில்மெண்டு பத்திரம்.

திருப்பனந்தாளில் கவர்ன்மெண்டாரால் நடத்தப்பெற்றுவரும் கால்நடை வைத்தியசாலைக்கு நம்மாலும் தஞ்சை ஜில்லா போர்டாராலும் வருஷந்தோறும் வர்த்தனை கொடுக்கப்பெற்று வருவதில் நாம் வருஷம் ஒன்றுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகை ஒரு வருஷச் செலவின் மொத்தத் தொகையில் கால் பங்கு அல்லது ரூ. 683—4—0 இந்த இரண்டில் எது குறைவோ அதுவேயாகும். இத் திட்டம் சென்னை அரசாங்கத்தார் 2782 - எம். எஸ். டிவலப்மெண்டு 27-6-44 தேதியுள்ள உத்தரவில் அங்கீகரிக்கப் பெற்றிருக்கிறது.

2. நாம் பட்டா மிராசுடன் நாகபட்டினம் தாலூகா அத்திப்புலியூர் வட்டத்தில் அனுபவித்து வருகிற ஏக்கர் 133 செண்டு 6 நன்செய் புன்செய் நிலமும், கும்பகோணம் தாலூகா திருபுவனம் வட்டத்தில் புன்செய் ஏக்கர் 1 செண்டு 77 நிலமும் ஆகமொத்தம் ஏக்கர் 134 செண்டு 83 நிலங்கள் ஷை முதல் பாராவில் காணப்பெற்றிருக்கும் கால்நடை வைத்தியசாலைக்கு வர்த்தனைத் தொகை கொடுத்து வரவும் இன்னும் கீழே கண்ணும் இதர சில தருமங்களுக்காகவும் ஒதுக்கி வைக்கப்பெற்றுள்ளன.

3. ஷை சொத்து நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ள வர்களாலும் எப்பொழுதும்போல் அனுபவிக்கப்பெற்று வரும்.

4. ஷை சொத்திலிருந்து எச்செலவும் போகவுள்ள நிகர வருமானம் இதில் கண்டுள்ள தருமங்களுக்குச் செலவிடப்பெறும்.

5. கால்நடை வைத்தியசாலைக்குக் கொடுத்தது போக எஞ்சியுள்ள தொகையிலிருந்து கும்பகோணம் கவர்ன்மெண்டு காலேஜில் நம் முன்னோரால் ஏற்படுத்தப் பெற்றிருப்பதும் ஷை காலேஜ பழைய மாணவர்களின் சங்கத்தால் 10-2-43ந் தேதி கடிதத்தில் அங்கீகரிக்கப் பெற்றிருப்பதுமான மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் ஸ்காலர்ஷிப்பு அல்லது உபகாரச் சம்பளம் அளிப்பதற்குச் செலவிடப் பெறும். ஷை உபகாரச் சம்பளம் ஒரு மாணவருக்கு மட்டும் கொடுப்பதாகும். உபகாரச் சம்பளம் பெறுபவருக்கு இண்டர்மீடியேட்டு வகுப்புக்களில் படிக்கும்பொழுது வருஷம் ஒன்றுக்கு ரூ. 130-ம் பி. ஏ. வகுப்புக்களில் படிக்கும்பொழுது ரூ. 170-மாக அளிக்கப்பெறும்.

6. ஷை தருமங்களுக்குக் கொடுத்தது போக மிச்சமாகும் தொகை இந்தத் தருமம் ஏற்படுத்தியவர்களும் அவர்களுக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களும் தங்கள் இஷ்டம்போல் இதர தரும காரியங்களுக்காகச் செலவிட்டுக்கொள்வார்கள்.

7. எக்காரணத்தைக் கொண்டாவது திருப்பனந்தாளில் ஏற்படுத்தப்பெற்றிருக்கும் கால்நடை வைத்தியசாலை பிற ஊர்களுக்கு மாற்றப்பெற்றாலும் அல்லது நிறுத்தப்பெற்றாலும் அதற்குக் கொடுக்கப் பெற்றுவரும் வர்த்தனைத் தொகை நிறுத்தப்பெற்று ஷை தொகை வேறு தரும காரியங்களுக்காக இந்தத் தருமம் ஏற்படுத்தியவர்களின் இஷ்டம்போல் செலவிடப்பெறும்.

இது திருவிடைமருதூர் சப்-ரிஜிஸ்திரார் ஆபீஸில் 5-9-47-ல் 1525-ம் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

## XI. ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமாரசுவாமி அன்னதானக் கட்டளை:

ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமாரசுவாமியென்னும் பெயரால் மிகப் பிரசித்தமாக வழங்கிவரும் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அவர்களின் நினைவு நாளாகிய வைகாசிமீ அமரபக்ஷம் திருதியை தினத்தில் அன்னதான தருமத்திற்காக ரூ. 10,000-க்கு எழுதிவைக்கப் பெற்ற கட்டளை.

2. இந்தத் தருமத்தின் மூலதனம் 1951-54ம் வருஷத்திய 3 சத விகிதம் வட்டியுள்ள ரூ. 10,000 சர்க்கார் கடன் பத்திரமாயுள்ளது. ஸ்டாக் சர்டிபிகேட்டு நெ. எம். எஸ். 1333. இதன் நிர்வாகம் நம்மிடத்திலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களிடத்திலுமே இருந்து வரும்.

3. இதிற் கண்ட சர்க்கார் கடன் பத்திரத்திலிருந்து கிடைக்கும் வட்டித்தொகை ஸ்ரீ காசியில் ஆண்டுதோறும் வைகாசி அமரபக்ஷம் திருதியை தினத்தில் பிராம்மண போஜனத்திற்காகவும் மகேசுவர பூஜைக்காகவும் செலவிடப்பெறும்.

4. அந்த அந்த வருஷத்தில் உள்ள விலைவாசியை அனுசரித்து ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் உள்ளபடி அன்னதானம் நடத்தப்பெறும்.

5. இந்தத் தருமம் ஒவ்வொரு வருஷத்திலும் நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும். இந்தத் தருமநிதி வேறெந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப்படமாட்டாது.

இது சம்பந்தமான பத்திரம் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 5-7-47-ல் 1947-ஆம் வருஷத்து 18-எண்ணுள்ள தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

XII. இராமேசுவரத்தில் ஆதி குமரகுருபர சுவாமிகள் அன்னதானக் கட்டளை:

இராமேசுவரத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமாரகுருபர சுவாமிகள் அவர்களின் நினைவு நாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியை தினத்தில் அன்னதான தருமத்திற்காக ரூ. 10,000-க்கு எழுதி வைக்கப்பட்ட கட்டளை.

2. இந்தத் தருமத்தின் மூலதனம் 1951—54-ம் வருஷத்திய 3 சத விகிதம் வட்டியுள்ள ரூ. 10,000 சர்க்கார் கடன் பத்திரமாயுள்ளது. ஸ்டாக் சர்டிபிகேட் எம். எஸ். நெ. 1334. இதன் நிர்வாகம் நம்மிடத்திலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களிடத்திலுமே இருந்து வரும்.

3. இதிற் கண்ட சர்க்கார் கடன் பத்திரத்திலிருந்து கிடைக்கும் வட்டித்தொகை இராமேசுவரத்தில் வைகாசி மாதம், அமரபட்

சம் திருதியை தினத்தில் பிராமண போஜனத்திற்காகவும், மகேசுவர பூஜைக்காகவும் ஆண்டுதோறும் செலவிடப்பெறும்.

4. அந்த அந்த வருஷத்தில் உள்ள விலைவாசியை அனுசரித்து ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் உள்ளபடி அன்னதானம் நடத்தப் பெறும்.

5. இந்தத் தருமம் ஒவ்வொரு வருஷத்திலும் நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும். இந்தத் தருமநிதி வேறெந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப்படமாட்டாது.

இந்தப் பத்திரம் 5-7-47-ல் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரா ராபீஸில் 1947-ஆம் வருஷத்து 17-ஆம் எண்ணுள்ள தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

XIII. 1947-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 17-ந் தேதி திருநள்ளாற்றில் ஏழைகளுக்கு அன்னம் அளித்தல் முதலிய தருமத்திற்கு எழுதிவைத்த டிரஸ்டு செட்டில்மெண்டு. திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 17-9-47-ல் 21-ஆம் நெம்பர் தஸ்தாவேஜாகப் பதிவாகியிருக்கிறது.

இந்தத் தருமத்துக்குரிய மூலதனம் ரூ. 100-க்கு ரூ. 3/- வீதம் வட்டி கிடைக்கும் ரூ. 3,000 (ரூபாய் மூவாயிரம்) பெறுமான எம். எஸ். 017181-ம் எண் உள்ள சர்க்கார் கடன் பத்திரமாகும். இந்தத் தருமத்தின் பரிபாலனம் நம்மிடத்திலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களிடத்திலும் இதன் 7-வது பாராவில் கண்டபடி உள்ள ஐந்து உத்தியோகங்களை அவ்வப்போது வகிக்கிற ஐந்து நபர்கள் அடங்கிய ஒரு கமிட்டியின் பொறுப்பில் இருந்து வரவேண்டும்.

2. இந்தச் செட்டில்மெண்டு பிரஞ்சு இந்தியா திருநள்ளாறு ஆலயத்துக்கு நம்மால் 28-6-1946-ல் இனாமாக அளிக்கப்பெற்றிருக்கும் மர இரதத்தில் வருஷந்தோறும் ஆவணி மூலத்தில் சுவாமி புறப்பாடு செய்யும் விசேஷத்துக்கும் ஷெ தினத்தில் ஏழைகளுக்கு அன்னம் அளிக்கவும் ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது.

3. இந்த மூலதனத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூ. 20 (ரூபாய் இருபது) ரிசர்வ் பண்டாக ஒதுக்கி வைத்தது போக, பாக்கித் தொகை ரூ. 70 ரூபாய் எழுபதையும் வருஷந்தோறும் ஷெ இரதத்தில் சுவாமி எழுந்தருளச் செய்யவும்

ஏழைகளுக்கு அன்னம் அளிக்கவும் செலவிடவேண்டியது. இந்த ரூ. 70 ரூபாய் எழுபதையும் வட்டி வருமானத்துக்குத் தகுந்தவாறு கூட்டவோ குறைக்கவோ கமிட்டியாருக்கு உரிமையுண்டு.

4. ஒவ்வொரு வருஷமும் ஆவணி மாதம் மூல நக்ஷத்திரக் கொண்டாட்ட நன்னாளில் ஷை இரதத்தில் சுவாமி எழுந்தருளிச் செய்யவேண்டியது. ஷை தினத்தில் ஷை ஆலயத்தில் அபிஷேக அலங்கார நைவேத்தியங்களுக்காக ரூ 35 (ரூபாய் முப்பத்தைந்துக்குள்) ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் கண்டபடி செலவு செய்ய வேண்டும்.

5. ஷை ஆவணி மூலம் திருநாளில் ஷை இரதம் இழுக்கும் பணியைச்செய்யும் ஆட்களுக்கும் இதர ஏழை மக்களுக்கும் அன்னம் அளிக்கும் தருமத்துக்காக ரூ 35 (ரூபாய் முப்பத்தைந்து) திட்ட ஜாப்தாப்படி செலவிடப்படும்.

6. இந்த மூலதனத்தொகை எப்போதாவது சர்க்காரால் திருப்பி அளிக்கப்பட்டால் அதை அச்சமயம் மிக வுயர்ந்த சர்க்கார் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யவேண்டியது.

7. இந்தத் தரும பரிபாலனம் செய்வதற்குரிய கமிட்டியில் அங்கத்தினர்கள் ஐவர் ஆவர். நம்மிடத்திலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களிடத்திலும் வேலை பார்த்து வரும் காறுபாறு, அட்டவணை, ஷராப், இமார்த்தி, இராயசம் ஆக ஐந்து உத்தியோகங்களை வகிக்கிறவர்கள் ஷை கமிட்டியில் அங்கத்தினர்களாயிருப்பார்.

8. இதன் 3-வது பாராவில் கண்ட ரிஸர்வ் பண்டு தொகை ரூ. 200 - ரூபாய் இருநூறுக்கு மேல் கூடின பிறகு ரூ. 200-க்கு மேற்படும் தொகை ஷை தினத்தில் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுடைய உசிதம்போல் அன்னமளிக்கும் தருமத்திற்குச் செலவிடப் பெறும்.

9. இந்த மூலத்தன தொகையும் பின்னும் சேர்க்கப்பெறும் தொகைகளும் நமது பேரிலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரவேண்டும்.

XIV. காசியில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானக் கட்டளை ரூ. 17,000.

ஸ்ரீ குமாரசாமி என்ற பெயருடன் காசியில் பிரபலமாக விளங்கிய ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளுடைய ஞாபகார்த்தமாக

ஆண்டுதோறும் மார்கழி மாதத்தில் அதாவது டிசம்பர் 16-ந்தேதி முதல் ஜனவரி 14-ந் தேதி முடிய ஸ்ரீ காசியில் அன்னதானம் நடைபெறும் பொருட்டு விசேஷ பக்தியுடன் இந்தக் கட்டளை அமைக்கப்பெற்றது.

2. இதற்கு ஏற்படுத்திய மூலதனமாகிய ரூ. 17,000, 100-க்கு 3 வீதம் வட்டிவரக்கூடிய ஸர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இந்தக் கட்டளை இதனை ஸ்தாபித்தவர்களாலும் அவர்களுடைய வார்சுதார்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

3. இந்தக் கடன் பத்திரத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டித் தொகையை மார்கழி மாதத்தில் அதாவது டிசம்பர் 16-ந் தேதி முதல் ஜனவரி 14-ந் தேதி முடிய, காசியிலுள்ள நமது சத்திரத்தில் நித்தியப்படி வழக்கமாக நடக்கும் அன்னதானத்துடன் சிறப்பாகப் பிராமண சமாராதனைக்கும், மகேசுவர பூஜைக்கும் (சைவர்களுடைய சாப்பாட்டுக்கும்) உபயோகிக்கவேண்டும்.

4. உணவளிக்க வேண்டிய காலத்தில் இருக்கும் சாமான்களின் விலைவாசிக்கு ஏற்றவாறு ஜாப்தா போட்டு அதன்படி உணவளிக்கப்பெறும்.

5. வருஷந்தோறும் இந்தத் தருமத்தை இதன் ஸ்தாபகரவர்களும், அவர்களுடைய வார்சுகளும் நடத்தி வருவார்கள். ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் இந்தக் கட்டளையை மாற்றக்கூடாது.

இந்தப் பத்திரம் 8-10-47 ல் திருவிடைமருதூர் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் 22-ஆம் எண் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

XV. திருப்பனந்தாளிலுள்ள ஸ்ரீகாசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி பேருக்கு ஒரு லக்ஷம் 1,00,000 ரூபாய் பெறுமானமுள்ள நிலங்களைப் பொறுத்து எழுதிவைத்த டிரஸ்டு செட்டில்மெண்டு பத்திரம்.

நமக்கு முன் ஸ்தானத்தில் இருந்து விளங்கிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகத் தமிழ் மொழியின் ஆக்கங் கருதி நம்மால் ஒரு தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாளில் அமைக்கப்பெற்றது. சென்னை அரசாங்கத்தார் 17-9-45ம் தேதியுள்ள Dis. No. 3154-45 உத்தரவில் கல்லூரியை அங்கீகரித்திருப்பதோடு சென்னை ஸர்வகலாசாலையார் 24-5-46ம் தேதியுள்ள A. 2788 கடிதத்தின் மூலம் கல்லூரியை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

2. பத்திரத்திற் குறிப்பிட்ட சொத்துக்கள் தஞ்சை ஜில்லா, கும்பகோணம் தாலூகா, வீராக்கண்வட்டம், ஆனைக்கோயில் கிராமத்தில் உள்ள நன்செய், புன்செய், நத்தம் மூன்றும் சேர்ந்து 97 ஏகரா 37 செண்டு விஸ்தீரணமுள்ள நிலங்களாகும். இவற்றின் பெறுமானம் ரூ. 1,00,000 (ஒரு லக்ஷம்). ஷெ நிலங்களிலிருந்து எச்செலவும் (சர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திகள் செலவு, கிராம சமுதாயம், மராமத்துச் செலவு முதலியன) போக நிகர வரும்படி வருஷத்துக்கு ரூ. 5,000 ஆகும். இந்த நிலங்கள் நம்பேரில் பட்டாவாகி நமது அநுபவத்தில் இருக்கின்றன.

காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் படிக்கும் ஏழையாகவும் தகுதியாகவும் உள்ள மாணுக்கர்களுக்கு உணவளிக்க இந்த நிகர வரும்படியை நிலையாக உபயோகித்து வர வேண்டும்.

3. ஷெ சொத்துக்கள் நம் அனுபவத்திலும் நிர்வாகத்திலும் நம் வார்சுகளுடைய அனுபவத்திலும் நிர்வாகத்திலும் இரண்டாவது பாராவில் கண்ட ஏற்பாட்டுக்கு உட்பட்டு இருந்துவரும்.

4. இத்தனை மாணுக்கர்களுக்கு உணவளிக்கலாம் என்பது, அவர்களைத் தேர்ந்தெடுத்தல், சாப்பாடு வகை முதலியன கிடைக்கக் கூடிய பணத்துக்குத் தக்கப்படி உசிதம்போல் நம்மாலும் நம் வார்சுகளாலும் நிச்சயித்து ஏற்பாடு செய்யப்படும்.

5. 2, 4 பாராக்களிற் குறித்தபடி மாணுக்கர்களுக்கு உணவளித்த பிறகு ஏதேனும் மிச்சப்படுமானல் நாமும் நம் வார்சுகளும் தீர்மானிக்கிறபடி இதுபோன்ற வேறு தர்மங்களுக்கு அந்த மிச்சத் தொகை உபயோகிக்கப்படும்.

6. மேலே குறிப்பிட்ட சொத்துக்களின் வரும்படியை மேலே விவரித்துள்ளபடி யல்லாமல் வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கக் கூடாது.

மேற்படி செட்டில்மெண்ட் பத்திரம் 16-10-47-ல் திருவிடைமருதூர் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் 2152-ஆம் எண் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

XVI. திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை: மடத்தைச் சார்ந்த மணிக்குடி கிராமத்திலுள்ள 44 ஏகரா 22 செண்டு நன்செய் நிலங்களின் நிகர வரும்படியை வருஷந்தோறும் வர்த்தனையாகக் கொடுத்து இந்த வைத்தியசாலை செவ்வையாக நடந்து வருகிறது.

XVII. ஸ்நான கட்டம்: திருப்பனந்தாளில் ஓடுகின்ற சுப்பிரமணிய நதி என்கிற மண்ணியாற்றில் பொது ஜனங்களின் உபயோகத்துக்காக ரூ. 2900 செலவில் நல்ல படித்துறைகளோடு கூடிய ஸ்நான கட்டமொன்று அமைக்கப்பெற்று ஜனங்களுக்கு மிக்க பயனளித்து வருகிறது.

XVIII. மணிக்கூண்டு: கும்பகோணம் நகரத்தில் மகாமகக் குளத்துக் கருகே ஒரு பிரதானமான இடத்தில் ரூ. 25,000 செலவில் அழகான ஒரு மணிக்கூண்டு கட்டப்பெற்று விளங்குகிறது.

XIX. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள அன்னதானக் கட்டளை, ரூ 9,000: காசி ஸ்ரீ குமாரசாமி மடத்தின் ஸ்தாபகராகிய ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர ஸ்வாமிகளின் ஞாபகார்த்தமாக ஆண்டுதோறும் அவர்களுடைய தினமாகிய வைகாசி மாதம் அமரபக்ஷம் திருதியையில் திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீ வைகுண்டத்தில் அன்னதானம் செய்ய மிகுந்த பக்திபூர்வமாக இந்தக் கட்டளை எற்படுத்தப்பெற்றது.

2. இதன் மூலதனமாகிய ரூ. 9,000, 100-க்கு 3 வீதம் வட்டி கிடைக்கக்கூடிய ஸர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இந்தக் கட்டளையின் நிர்வாகம் நம்மிடத்திலும் நம் வார்சுகளிடத்திலும் இருக்கும்.

3. காசியில் ஸ்ரீ குமாரசாமி மடத்தை ஸ்தாபித்த ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர ஸ்வாமிகள் அவதரித்த ஸ்தலமாகிய ஸ்ரீவைகுண்டத்தில் பிராமண சந்தர்ப்பணையும் மகேசுவர பூஜை (சைவர்களுக்கு அன்ன மளித்தல்)யும் நடத்த இந்த ஸர்க்கார் கடன் பத்திரத்தின் வருஷ வட்டி வரும்படி உபயோகிக்கப்பெறும்.

4. ஆண்டுதோறும் மேலே குறிப்பிட்ட விசேஷ தினசமயம் இருக்கும் சாமான்களின் விலைவாசியைப் பொறுத்துத் திட்ட ஜாப்தா தயார்செய்து அதற்குத் தக்கபடி அன்னதானம் நடத்தப்பெறும்.

5. இந்தக் கட்டளையை ஸ்தாபித்தவர்களும் அவர்களுடைய வார்சுகளும் ஆண்டுதோறும் அன்னதானத்துக்கு ஏற்பாடு செய்து நடத்திவருவார்கள். மேலே குறிப்பிட்டபடி யல்லாமல் வேறு எந்தக் காரியத்துக்கும் இந்தக் கட்டளை மாற்றப்படமாட்டாது.

இந்தப் பத்திரம் 1-11-47-ல் எழுதி அதே தேதியில் திருவிடை மருதூர் ஸப் ரிஜிஸ்திராராபீஸில் 1947-ஆம் வருஷத்து 26-ஆம் எண் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

XX. மாட்சிமை பொருந்திய மைசூர் மஹாராஜா அவர்கள் தேவாரப் பரிசு ரூ. 5,000.

உதார குணமும், தெய்வ பக்தியும், சங்கீத அபிமானமும் கொண்ட மைசூர் மஹாராஜாவாகிய மாட்சிமை பொருந்திய ஜய சாமராஜேந்திர உடையார் பஹதூரின் பெயரால் இந்தப் பரிசு அமைக்கப்பெற்றது. மைசூர் ஸம்ஸ்தானத்தில் தேவாரம் விரும்பப் பெற்று அதன் ஞானம் பரவவேண்டு மென்பதே இந்தப் பரிசின் நோக்கம். மாட்சிமை பொருந்திய மைசூர் மகாராஜா அவர்கள் தேவாரப் பரிசு என்பதே இதன் பெயர்.

2. இந்தப் பரிசின் மூலதனமாகிய ரூ. 5,000 ஸர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இதன் நிர்வாகம் மைசூர் ஸர்வகலாசாலையாரிடம் இருக்கும். மேற்படி ஸர்வகலாசாலையார் தங்கள் உசிதம் போல் அவ்வப்போது ஜாஸ்தி வட்டி வரக்கூடிய ஸர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக இந்த மூலதனத்தை மாற்றி வைக்கலாம். ஆண்டு தோறும் கிடைக்கும் வட்டித் தொகையிலிருந்து ரூ. 100 தேவாரத்தை மிகவும் நன்றாகப் பாடுபவருக்குப் பரிசாக அளிக்கப்பெறும். சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்னும் மூவர் தேவாரங்களிலிருந்தும் எல்லாப் பண்களும் கலந்திருக்கும்படி 50 பாசுரங்களை ஸர்வகலாசாலையார் 4 வருஷங்களுக்கு ஒரு முறை பொறுக்கி யெடுத்து அவற்றை அரும்பதவுரையுடன் அச்சிட்டு ஒரு புத்தகமாக வெளியிடவேண்டும். ஒருமுறை பொறுக்கிய பாசுரங்களுக்குப் பதிலாக வேறு பாசுரங்களை அடுத்த முறை பொறுக்கவேண்டும். வட்டியிலிருந்து பரிசுக்காக ரூ. 100 ஒதுக்கி, மிச்சத் தொகையை இந்தத் தேவாரத் திரட்டை அச்சிட்டு வெளியிட உபயோகித்துக் கொள்ளலாம். அப்பால் மிஞ்சும் வட்டித் தொகை மூலதனத்தோடு சேர்க்கப் படவேண்டும். பரிசுப் போட்டிக்காக வரும் மாணாக்கர்களுக்கு இலவசமாகத் தேவாரத் திரட்டின் பிரதிகளை விநியோகிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

3. பரிசளிப்பு சம்பந்தமான நிபந்தனைகளாவன :—

(i) மைசூர் ஸர்வகலாசாலையாரால் ஏற்றுக்கொள்ளப்பெற்ற காலேஜ்களில் உள்ள மாணவர்கள் ஜாதிமத பேதமில்லாமல் ஆண்பாலாரேனும், பெண்பாலாரேனும் இந்தப் பரிசுப் போட்டிக்கு வரலாம்.

(ii) பரிசுப் போட்டிக்கு வர விரும்பும் மாணாக்கர்கள் மேலே இரண்டாம் பாராவில் குறிப்பிட்ட ஐம்பது தேவாரப் பாசுரங்களை

யும் பாராமல் உரிய பண்ணில் நல்ல சாரீரத்துடன் பாடக்கூடியவர்களாக இருக்கவேண்டும்.

(iii) எந்த ஆண்டிலேனும் இருவரோ மேற்பட்டவரோ பரிசுக்குத் தக்கவர்களென்று கருதப்பட்டால், திருவுளச் சீட்டுப் போட்டு யார் பெயர் அதில் கிடைக்கிறதோ அவரே பரிசுபெற உரியவரென்று தீர்மானிக்கப்பெறுவர்.

(iv) ஒரு முறை பரிசு பெற்றவர் மறுபடி பரிசுப் போட்டிக்கு வர உரியவரல்லர்.

4. ஸர்வ கலாசாலையின் கான்வொகேஷன் சமயத்தில் பரிசு வழங்கப்பெறும். எந்த வருஷத்திலேனும் பரிசு பெற வேண்டியவர் நேரில் வந்து பெற்றுக்கொள்ள முடியாவிட்டால் பரிசுத்தொகையை அவருக்கு அனுப்புவதற்கு ஸர்வ கலாசாலையார் ஏற்பாடு செய்ய வேண்டும். பரிசை அடைவதற்கு முன் பரிசுக்குரியவர் இறந்துவிட்டால் அவருடைய சட்டபூர்வமான வார்சுகளுக்குப் பரிசுத் தொகை கொடுக்கப்பெறும்.

5. எந்த வருஷத்திலோ, பல வருஷங்களிலோ பரிசுப் போட்டிக்கு ஒருவரும் வராவிட்டால் பரிசுத்தொகையை மூலதனத்தோடு சேர்த்துவிட வேண்டும். இவ்வாறு அவ்வப்போது மூலதனத்தோடு பரிசுத்தொகை சேர்ந்து அதிக வட்டி வரும்படி கிடைக்க இடமுண்டானால், சர்வ கலாசாலையார் உசிதம்போல் காலத்துக்கேற்றபடி பரிசுத் தொகையை அதிகப்படுத்தவோ, அதிகப் பரிசுகளை வழங்கவோ ஏற்பாடு செய்யலாம்.

6. வருஷந்தோறும் பரிசு வழங்கிய விவரம், பரிசு பெற்றவர் பெயர், விலாசம், அந்த வருஷத்து வரவுசெலவுக்கணக்கு இவற்றை இந்தப் பரிசை ஏற்படுத்தியவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் அனுப்பி வரவேண்டும்.

7. இந்தக் கட்டளையை மேலே குறிப்பிட்ட காரியத்துக்கன்றி வேறெதற்கும் மாற்றக்கூடாது.

குறிப்பு.—இவ் விஷயம் மைசூர் கவர்ன்மெண்டாருடைய ஆலோசனையில் இருந்து வருகிறது.

XXI. ஸ்ரீ குருஞான சம்பந்த ஸ்வாமிகள் ஞாபகார்த்தமான தேவாரப் பரிசுக் கட்டளை.

தேவாரத் திருமுறைகளின் அறிவு மாணுக்கர்கள் கோஷ்டியில் நன்ருக ஊன்றிப் பரவவேண்டு மென்ற நோக்கத்துடன், தர்மபுரம் ஆதீனத்தின் மூல புருஷரும், புகழ்பெற்ற முனிபுங்கவரும், சைவசித்தாந்தக் கோட்பாடுகளை ஜனங்களுக்கு மிக நன்ருக விளக்கியவரும், குரு ஞானசம்பந்த சுவாமிகளென்னும் பிரபலமான பெயரோடு விளங்கியவருமான ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளின் ஞாபகார்த்தமாக இந்தக் கட்டளை பக்தியுடன் அமைக்கப் பெற்றது.

2. இந்தக் கட்டளையின் மூலதனம் ரூ. 5,000 பெறுமானம் உள்ள 100-க்கு 3 வட்டி கிடைக்கும் ஸர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இதன் நிர்வாகம் மாயூரம் நகர பரிபாலன சபையாரிடமிருக்கும்.

3. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையிலிருந்து தேவாரத்தை நன்ருகப் பாடக்கூடிய முதலிருவருக்கு முறையே ரூ. 60, ரூ. 50 ஆக ரூ. 110 அளிப்பதற்கு உபயோகிக்கப்பெறும். மிச்சத் தொகை தேவாரத் திரட்டை அச்சிட்டு வெளியிடுவதற்கும் எதிர்பாராது நேரக்கூடிய வேறு செலவுகளுக்கும் உபயோகிக்கப் படும்.

4. மாயூரம் முனிஸிபல் எல்லைக்குள்ளிருக்கும் ஹைஸ்கூல்களில் IV, V, VI பாரங்களிலோ அவற்றிற்குச் சமமான வேறு வகுப்புக்களிலோ படிக்கும் மாணவர்களே இந்தப் பரிசுப் போட்டிக்கு வரலாம். தேவாரப் பாசுரங்கள் ஐம்பதை உரிய பண்களில் நல்ல சாரீரத்தோடு பாடக்கூடிய மாணுக்கர்களே பரிசுப் போட்டிக்கு வரத் தகுதியானவர்கள். ஐம்பது தேவாரங்கள் இன்னவையென்பது அவ்வப்போது முன்னதாகவே தெரிவிக்கப்படும்.

5. சம்பந்தர், அப்பர், சுந்தரர் இந்த மூவர் தேவாரங்களிலிருந்தும் எல்லாப் பண்களும் கலந்து வரும்படி ஐம்பது பாசுரங்களை நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை மாயூரம் நகர பரிபாலன சபையார் தேர்ந்தெடுத்து அவற்றை அரும்பதவுரையுடன் ஒரு திரட்டாக அச்சிட்டு வெளியிடவேண்டும். அடுத்த நான்கு வருஷங்களுக்குப் பொறுக்கி யெடுக்கும் தேவாரப் பாசுரங்கள் இவையல்லாத வேருக இருக்கவேண்டும்.

6. பரிசுக்குரிய நிபந்தனைகள் வருமாறு:—

(i) மாயூரம் முனிஸிபல் எல்லைக்குள் இருக்கும் ஹைஸ்கூல்களில் IV, V, VI-ஆம் பாரங்களில் படிப்பவர்கள் ஜாதி மத பேத

யின்றி ஆண்பாலாராயினும் பெண்பாலாராயினும் பரிசுப் போட்டிக்கு வரலாம்.

(ii) பொறுக்கி எடுத்த ஐம்பது தேவாரங்களையும், பாராமல் சரியான பண்களில் நல்ல சாரீரத்துடன் பாடவேண்டும்.

இதற்காக ஏற்பட்டுள்ள பரீக்ஷை இரண்டு பிரிவுகளையுடையது.

முதற் பிரிவு : தமிழில் 50 தேவாரங்களையும் சரியான பண்ணில் இசையுடன், பாராமல் பாடி, பாசுரங்களின் பொருளையும் கருத்தையும் தெரிவிக்க வேண்டும். இதற்கேற்பட்ட அம்சம் (மார்க்) 50.

இரண்டாம் பிரிவு : குறிப்பிட்ட 50 தேவாரங்களுள் பொறுக்கிக் கொடுக்கும் எவற்றையேனும் சரியான பண்ணில் பாசுரங்களின் கருத்தை நன்றாக அறிந்துகொண்டது விளங்கும்படி நல்ல இசையுடன் பாடவேண்டும். இதற்கு ஏற்பட்ட அம்சம் 50.

(iii) வருஷந்தோறும் மாயூரம் நகரபரிபாலன சபையார் அந்த அந்த ஸ்கூல் ஹெட்மாஸ்டர்கள் மூலம் அவரவர்கள் பள்ளிக்கூடத்தில்படிக்கும் மாணாக்கர்களுடைய விண்ணப்பங்களைப் பரிசுப்போட்டிக்கு வருவிக்கலாம். விண்ணப்பம் செய்துகொண்டவர்களுக்குத் தேவாரத்திரட்டுப் பதிகங்கள் இலவசமாக வழங்கப்பட வேண்டும்.

(iv) அந்த அந்த ஸ்கூல் அதிகாரிகள் தங்கள் தங்கள் பாடசாலைகளில் பூர்வாங்கப் பரீக்ஷையொன்று நடத்தி அதில் சிறந்த ஐந்து மாணாக்கர்களைப் பொறுக்கி முடிவுப் பரீக்ஷைக்கு அனுப்பவேண்டும். அந்த முடிவுப் பரீக்ஷை மாயூரம் முனிஸிபல் சபையார் அமைக்கும் பரீக்ஷைச் சங்கம் ஒன்றால் மாயூரத்தில் நடத்தப்படும். அந்தச் சங்கத்தின் அங்கத்தினர்கள், மாயூரம் முனிஸிபல் சேர்மன், முனிஸிபல் கமிஷனர், பரீக்ஷைக்கு வரும மாணாக்கர்கள் படிக்கும் ஒவ்வொரு ஹைஸ்கூலுக்கும் ஒவ்வொரு பிரதிநிதி ஆகிய இவர்களே யாவர். பரீக்ஷை நடைபெறும்பொழுது தருமபுரம் மடத்திலிருந்து ஒரு பிரதிநிதியை அழைத்துக்கொள்ளலாம்.

(v) ஒருமுறை பரிசு வாங்கியவர் மறுமுறை போட்டிக்கு வரத் தகுதியற்றவராவர்.

(vi) பரீக்ஷையின் முடிவை மாயூரம் முனிஸிபாலிடியார் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுக்கும், அவர்களுடைய வார்சு

களுக்கும், சம்பந்தப்பட்ட பாடசாலை அதிகாரிகளுக்கும் தெரிவிக்க வேண்டும்.

7. முதற் பரிசின் தொகை ரூ. 60; இரண்டாம் பரிசின் தொகை ரூ. 50. முடிவுப் பரீக்ஷையில் அதிகமான அம்சங்களை வாங்குபவருக்கு முதற் பரிசும் அதற்கடுத்தபடியான அம்சங்களை வாங்குபவருக்கு இரண்டாவது பரிசும் அளிக்கப்பெறும். வருஷந்தோறும் ஐப்பசி மாதம் கடைமுழுக்கு நாளில் மாயூரத்தில் காவிரியின் வடகரையிலுள்ள வள்ளலார் கோயில் தீர்த்த மண்டபத்தில் பரிசுகள் வழங்கப்பெறும்.

8. ஆண்டுதோறும் முனிஸிபாலிடியார் வரவுசெலவுக் கணக்குகளை இந்தக் கட்டளையின் ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் அனுப்பி வரவேண்டும்.

9. இதன் மூலதனத்தை மேலே குறித்தபடியல்லாத வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது. உத்தேசித்த விஷயத்துக்கு இந்த மூலதனம் உபயோகிக்கப்படா விட்டால், இந்தக் கட்டளையை ஸ்தாபித்தவர்களுக்கோ அவர்களுடைய வார்சுகளுக்கோ ஷை கட்டளையை நிறுத்திவிட அதிகாரம் உண்டு.

இந்தக் கட்டளையை மாயூரம் நகர பரிபாலன சபையார் தங்களுக்குள் 17-11-47-ல் நடந்த கூட்டத்தில் அங்கீகரித்துக்கொண்டு விட்டதாக முனிஸிபல் கமிஷனர் 21-11-47-ல் 6957 நெ. கடிதம் மூலம் தெரிவித்திருக்கிறார். ஷை கட்டளைக்குத் திருவிடைமருதூர் சப்ரிஸ்திரார் ஆபீசில் 26-1-48ல் 1948-ம் வருஷத்து 5-நெ. தஸ்தாவேஜாக 4-ம் நம்பர் புத்தகத்தில் 42-வது வால்யூம் 92 to 97 பக்கங்களில் ரிஜிஸ்தர் செய்யப் பெற்றுள்ளது.

XXII. சென்னை விவேகானந்தா கல்லூரியில் ஸ்ரீ ராஜாஜி சைவசித்தாந்த வித்தியார்த்தி சம்பள உதவிக் கட்டளை ரூ. 10,000 - 1947 நவம்பரில் ஏற்படுத்தியது.

சிறந்த தமிழ் விற்பன்னரும், ஞானவானும், அரசியல் நிபுணரும், மேற்கு வங்காளத்தின் கவர்னரும், ராஜாஜி என்று பிரபலமாக விளங்குபவருமான மாட்சிமை பொருந்திய ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியாரவர்கள் பெயரால் இந்தக் கட்டளை அமைக்கப்பெற்றது. சைவசித்தாந்த சாஸ்திரக் கல்வி விருத்தியடைந்து எங்கும் பரவவேண்டுமென்பதே இந்தக் கட்டளையின் நோக்கம். கீழே கண்ட நிபந்தனைகளின்படி சென்னை விவேகானந்தா கல்லூரி மாணாக்கர்களுக்குச் சம்பள உதவி அளிக்கப்படும். இது

ஸ்ரீ ராஜாஜி சைவ சித்தாந்த வித்தியார்த்தி சம்பள உதவிக் கட்டளை என்று வழங்கும்.

2. இதற்கு ஏற்படுத்திய மூலதனம் ரூ. 10,000. இதன் பரிபாலனம் சென்னை விவேகானந்தா கல்லூரியைச் சேர்ந்தது. வட்டி வரக்கூடிய ஸர்க்கார் கடன் பத்திரங்களில் இந்த மூலதனத்தை விவேகானந்தா கல்லூரியார் போட்டு வைக்கவேண்டும்.

3. மூலதனத்திலிருந்து கிடைக்கும் வட்டித் தொகையை விவேகானந்தா கல்லூரியில் B.A., வகுப்பில் சைவசித்தாந்த சாஸ்திரத்தை இஷ்டபாடமாக எடுத்துக்கொண்டு படிக்கும் யோக்கியதையுள்ள எளிய தமிழ் மாணவர்களில் ஜாதி மத வேறுபாடு பாராமல் இருவருக்கு வருஷந்தோறும் ரூ. 135 சம்பள உதவி தவணைக்கு ரூ. 15 வீதம் ஒன்பது தவணையில் அளிக்கப்படும். கல்லூரிப்படிப்பில் சைவசித்தாந்த சாஸ்திரத்தை ஒரு பாடமாக எடுத்துக்கொண்டு படிக்கும் மாணாக்கர்களில் ஒருவரை முதல் வருஷத்தில் தேர்ந்தெடுக்க வேண்டும். இரண்டாம் வருஷத்தில் வேறொரு மாணவரை இவ்வாறு தேர்ந்தெடுக்கவேண்டும். இரண்டாம் வருஷம் தொடங்கி வருஷந்தோறும் இரண்டு மாணவர்கள் சம்பள உதவி பெறுவார்கள். முதல் வருஷத்திலே படிப்பில் தேர்ச்சியைக் காட்டி மறு வருஷமும் தொடர்ந்து படித்தால் இந்த உதவி இரண்டு வருஷங்களுக்கு அளிக்கப்படும்.

4. சம்பள உதவி பெறும் மாணவர் வகுப்புக்கு ஒழுங்காக வராமலிருந்தாலோ, தவறுதலாக நடந்தாலோ, படிப்பில் அபிவிருத்தி காட்டாமல் இருந்தாலோ, அவர் சம்பள உதவியை இழந்தவராவர் என்று உத்தரவுபோடக் கல்லூரி பிரின்ஸிபாலுக்கு அதிகாரமுண்டு. அவருக்குப் பதிலாக வேறொருவரைத் தேர்ந்தெடுத்து அவருக்குச் சம்பள உதவியளிக்க வேண்டும். இவ்விஷயத்தில் பிரின்ஸிபால் செய்வதே முடிவானது.

5. எந்த வருஷத்திலேனும் சம்பள உதவி அளிக்கப்படாவிட்டாலோ, உதவி அளிக்கப்பட்ட சில காலத்துக்குப்பின் எந்த மாணவரேனும் அதை இழக்கும்படி எற்பட்டாலோ, கொடுபடாமல் நிற்கும் தொகையும், வட்டியிலிருந்து சம்பள உதவி அளித்தபின் மிஞ்சும் தொகையும் மூலதனத்தோடு சேர்க்கப்படவேண்டும்.

6. ஒரு காலத்தில் இவ்விதமாகச் சேரும் தொகையோடு மூலதனம் அதிகரித்தால் உதவித் தொகையைப் போதிய அளவு அதிகரிக்கவோ, அதிகமான மாணவர்களுக்கு உதவியளிக்கவோ

கல்லூரி கமிட்டியார் சந்தர்ப்பத்துக்கேற்றபடி தங்கள் உசிதம் போல் ஏற்பாடு செய்யலாம்.

7. மேலே சொல்லிய நிபந்தனைகளின்படி எல்லாம் நிறைவேறியபின் தொகை மிஞ்சுமானால் சைவ சித்தாந்த சாஸ்திரப் படிப்புக்குரிய சிவஞான சித்தியார் என்னும் புத்தகப் பிரதிகளை வாங்க அதை உபயோகித்துச் சம்பள உதவிபெறும் மாணவர்களுக்கு அந்தப் பிரதிகளை இலவசமாக விநியோகிக்கலாம்.

8. ஒவ்வொரு வருஷத்தின் முடிவிலும் கல்லூரிக் கமிட்டியார் இந்தத் தர்ம ஸ்தாபகர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் வரவுசெலவுக் கணக்கையும், சம்பள உதவிபெற்ற மாணவர்களின் பெயர்களையும் அனுப்பி வரவேண்டும்.

9. மூலதனத்தின் வரும்படியையும், அவ்வப்போது சேரும் தொகையையும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்த விஷயத்துக்கும் உபயோகிக்கலாகாது.

இந்தக் கட்டளை விவேகானந்தா கல்லூரி 5—1—48 கடிதத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

XXIII. காசி ஹிந்து சர்வகலாசாலையில் 1947 நவம்பரில் ரூ. 20,000 இருபதினாயிரத்துக்கு ஏற்படுத்திய சைவசித்தாந்த வித்தியார்த்தி சம்பள உதவிக் கட்டளை.

சிறந்த ஞானியும், வித்தியா விநோதரும், அரசியல் நிபுணரும், காசி ஹிந்து சர்வகலாசாலையின் தற்கால வைஸ்சான்ஸலருமான ஸர் எஸ். ராதாகிருஷ்ணனவர்கள் பெயரால் இந்தக் கட்டளை ஏற்படுத்தப்பெற்றது. சைவ சித்தாந்த சாஸ்திரக் கல்வி விருத்தியடைந்து பரவ வேண்டுமென்பதே இதன் நோக்கம். காசி ஹிந்து ஸர்வகலாசாலையில் கல்வி பயிலும் மாணவர்களுக்குக் கீழே காட்டிய நிபந்தனைகளின்படி சம்பள உதவி அளிக்கப்படும். இந்தக் கட்டளை ஸர் எஸ். ராதாகிருஷ்ணன் சைவ சித்தாந்த வித்தியார்த்தி சம்பள உதவிக் கட்டளை என்று பெயர் பெறும்.

2. இதற்கு அமைத்த மூலதனம் ரூ. 20,000; ரொக்கமாக ரூ. இருபதினாயிரம். காசி ஹிந்து சர்வகலாசாலையாருடைய பரிபாலனத்தில் இந்த மூலதனம் இருக்கும். வட்டி வரக்கூடிய ஸர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக இந்தத் தொகையை ஸர்வ கலாசாலையார் போட்டு வைக்கவேண்டும்.

3 இந்த நிதியிலிருந்து வட்டியை ஒவ்வொருவருக்கும் வருஷம் ஒன்றுக்கு ரூ. 135-வீதம் ஹிந்து சர்வகலாசாலையில் தமிழை இரண்டாம் பாஷையாகவும், சைவ சித்தாந்த சாஸ்திரத்தை இஷ்ட பாடமாகவும் எடுத்துக்கொண்டு கல்வி பயிலும் மாணக்கர்களில் ஜாதி மதபேதம் பாராமல் யோக்கியதையுள்ள எளிய வித்தியார்த்திகள் நால்வருக்கு அளிக்க உபயோகப் படுத்தவேண்டும். ரூ. 135, தவணை ஒன்றுக்கு ரூ. 15 ஆக ஒன்பது தவணைகளில் அளிக்கப் படும். எம். ஏ. பரீக்ஷைக்காகச் சைவ சித்தாந்த சாஸ்திரத்தைப் படிக்கும் வித்தியார்த்திகளில் இருவரை முதல் வருஷத்தில் தேர்ந்தெடுத்து அவர்களுக்குச் சம்பள உதவி அளிக்கவேண்டும். இரண்டாம் வருஷம் அதே மாதிரி வேறு இருவர்களைப் பொறுக்கி, அவர்களுக்குச் சம்பள உதவி அளிக்கவேண்டு. இரண்டாம் வருஷம் முதல் பண உதவிபெறுவோர் நால்வராவர். முதல் வருஷத்தில் வித்தியார்த்தியின் படிப்பு நன்றாக இருந்து இரண்டாவது வருஷத்திலும் அவர் தொடர்ந்து கல்வி பயின்றால் சம்பள உதவி அவருக்கு இரண்டு வருஷங்களுக்கு உண்டு.

4. சம்பள உதவிபெறும் வித்தியார்த்தி வகுப்புக்கு ஒழுங்காக வராமல் இருந்தாலோ, தவறுதலாக நடந்தாலோ, படிப்பில் அபிவிருத்தி காட்டாமல் இருந்தாலோ அவர் சம்பள உதவியை இழந்தவராவர் என்று உத்தரவுபோட வைஸ் சான்ஸலருக்கு அதிகாரமுண்டு. அவருக்குப் பதிலாக வேறொரு தகுதியான வித்தியார்த்தியைத் தேர்ந்தெடுத்து அவருக்குச் சம்பள உதவியை அளிக்கலாம். இவ் விஷயத்தில் வைஸ் சான்ஸலர் செய்வதே முடிவானது.

5. எந்த வருஷத்திலேனும் சம்பள உதவி அளிக்கப் பெறாமலோ, அளிக்கப்பட்ட சில காலத்துக்குப் பின் எந்த வித்தியார்த்தியேனும் அதை இழக்கும்படி ஏற்பட்டாலோ, செலவாகாமல் நின்ற தொகையும், சம்பள உதவி செய்தபின் வட்டியில் மிச்சப் படும் தொகையும் மூலதனத்தோடு சேர்க்கப்படவேண்டும்.

6. இவ்விதம் சேரும் தொகையோடு மூலதனம் போதிய அளவு அதிகரித்தால், சர்வகலாசாலையார் சம்பள உதவித் தொகையை அதிகப்படுத்தவோ, அதிக வித்தியார்த்திகளுக்குச் சம்பள உதவியளிக்கவோ, சர்வகலாசாலையார் சந்தர்ப்பத்துக் கேற்றபடி தங்கள் உசிதம்போல் ஏற்பாடு செய்யலாம்.

7. மேலே குறித்தபடி எல்லாம் நிறைவேறிய பிறகு தொகை மிஞ்சுமானால், படிப்புக்கு வேண்டிய "சிவஞான சித்தியார்" என்னும் புத்தகத்தில் வேண்டிய அளவு பிரதிகளை அதைக்கொண்டு

வாங்கி, சம்பள உதவி பெறும் வித்தியார்த்திகளுக்கு அவற்றை இலவசமாகக் கொடுக்கலாம்.

8. சர்வகலாசாலை ஆலோசனைச் சபையார் ஒவ்வொரு வருஷ முடிவிலும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் வரவுசெலவுக் கணக்கையும், சம்பளஉதவி பெற்ற வித்தியார்த்திகளின் பெயர்களையும் அனுப்பிவரவேண்டும்.

9. மூலதனத்தின் வரும்படியையும் அவ்வப்போது சேரும் தொகையையும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு மாறாக வேறு எந்த விஷயத்துக்கும் உபயோகிக்கலாகாது.

ஷை எண்டௌமெண்டு ஸ்ரீ காசி யூனிவர்சிட்டி கவுன்சில் 15-12-47-ல் கூட்டம் 376-நெ. தீர்மானத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

XXIV. திருப்பனந்தாளில் மண்ணி நதிக்கரையில் ஹரிச்சந்திர கட்டம் (மயானம்) நிறுவ, திருப்பனந்தாள் பஞ்சாயத்து போர்டுக்கு நன்கொடை ரூ. 3,000-ரூபாய் மூவாயிரம்.

XXV. தஞ்சையில் காசநோய் ஆஸ்பத்திரி கட்டுவதற்கு 27-8-47-ல் நன்கொடை ரூ. 1,000. 26-1-48-ல் ரூ 20,000-ஆக ரூ. 21,000.

XXVI. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் ஞாபகார்த்தத் தேவாரப் பரிசுக் கட்டளை; மூலதனம் ரூ. 5,000. (4-12-1947.)

காசியில் காசி மடத்தை ஸ்தாபித்த புகழ் வாய்ந்தவரும், தமிழிற் சிறந்த கல்விமானும், பதினேழாம் நூற்றாண்டில் காசி முதல் இராமேசுவரம் வரையில் தமிழ்க் கல்வியைப் பரவச் செய்தவருமான ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளுடைய ஞாபகார்த்தமாக இந்தக் கட்டளை ஏற்படுத்தப்பெற்றது. மாணவர்கள் கோஷ்டியில் தேவாரத் திருமுறைகளின் பயிற்சி நன்றாக ஏற்பட்டுப் பரவ வேண்டுமென்பதே இதன் நோக்கம்.

2. இதற்கு அமைத்திருக்கும் மூலதனம் ரூ. 5,000, ஸர்க்கார் ஜாமீன் பத்திரமாக உள்ளது. திருப்பனந்தாள் காசிவாசி சுவாமிநாத ஸ்வாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் நிதியை நிர்வகிக்கும் கமிட்டியாரே இந்த நிதியைப் பரிபாலித்து வருவார்கள்.

3. தேவாரத்தை மிகவும் நன்றாகப் பாடக்கூடிய முதல் இருவருக்கு முறையே ரூ. அறுபதும், ரூ. ஐம்பதும் ஆக ரூ. 110. இந்த மூலதனத்தின் வட்டியைக்கொண்டு ஆண்டுதோறும் பரிசாக அளிக்கவேண்டும். மிச்சப்படும் வட்டித் தொகையைத் தேவாரத் திரட்டை அச்சிட்டு வெளியிடும் செலவு முதலிய செலவுகளுக்கு உபயோகிக்க வேண்டும். அதன் பிறகு மிஞ்சும் தொகையை மூலதனத்தோடு சேர்க்கவேண்டும்.

4. ஸ்ரீ ஆதி குமரகுருபர ஸ்வாமிகளுடைய அவதார ஸ்தலமாகிய ஸ்ரீ வைகுண்டம் முனிஸிபாலிடி அல்லது பஞ்சாயத்து யூனியன் எல்லைக்குள் இருக்கும் ஸெகண்டரி கலாசாலைகளிலும் உயர்தரக் கலாசாலைகளிலும் IV முதல் VI பாரங்கள் வரையில் அல்லது அவற்றிற்குச் சமமாக வைக்கப்படும் வேறு வகுப்புக்களில் படிக்கும் மாணவர்கள் இந்தப் பரிசுப் போட்டிக்கு வரலாம். வருஷந்தோறும் பாடமாக ஏற்படுத்தும் ஐம்பது தேவாரப் பாசுரங்களை அவர்கள் பண்ணோடு பாராமல் ஓதவேண்டும்.

5. திருப்பனந்தாள் காசிவாசி ஸ்வாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் கமிட்டியார் நான்கு வருஷங்களுக்கு ஒரு முறை சம்பந்தர், அப்பர், சுந்தரர் இவர்களுடைய பதிகங்களிலிருந்து பண்களெல்லாம் கலந்திருக்கும்படி ஐம்பது பாசுரங்களைப் பொறுக்கி யெடுத்து அருஞ்பதவுரையுடன் ஒரு புத்தகமாக அச்சிட்டு வெளியிடவேண்டும். மறுபடி 4 வருஷங்களுக்காகப் பொறுக்கும் பாசுரங்கள் இவையல்லாத பாசுரங்களாக இருக்கவேண்டும்.

6. பரிசளிப்புக்கு உரிய நிபந்தனைகள் வருமாறு:—

(i) ஸ்ரீவைகுண்டம் முனிஸிபாலிடி அல்லது யூனியன் எல்லைக்குள் இருக்கும் ஸெகண்டரி பாடசாலைகளிலும் உயர்தரப் பாடசாலைகளிலும் படிக்கும் மாணவர்களுக்கு ஆண்பாலாராயினும் பெண்பாலாராயினும் ஜாதிமத வேறுபாடின்றி இந்தப் பரிசு அளிக்கப்படும்.

(ii) பரிசுப் போட்டிக்கு வரும் மாணவர்கள் ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பாராமல் சரியான பண்ணில் நல்ல இசையுடன் பாடவேண்டும். இதற்காக உரிய பரீக்ஷை இரண்டு பிரிவையுடையது.

(a) முதற் பிரிவு : தேவாரப் பாசுரங்கள் ஐம்பதையும் பாராமல் ஒப்பித்துப் பாசுரங்களின் பொருளையும் கருத்தையும் விளக்கமாகச் சொல்லவேண்டும். இதற்கு ஏற்பட்ட அம்சம் 50.

(b) இரண்டாவது பிரிவு: சரியான பண்ணில், பாசுரங்களின் பாவத்தை நன்றாக அறிந்துகொண்டு அவற்றை நல்ல சாரீரத்தோடு பாடவேண்டும். இதற்கு ஏற்பட்ட அம்சம் 50.

(iii) மாணவர்கள் தங்கள் பாடசாலை ஹெட்மாஸ்டர் மூலம், பரிசுப் போட்டிக்கு உரிய விண்ணப்பங்களை ஜூலை ௴ 31-ம் உக்கு முன் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும்.

(iv) பரிசுப் போட்டிக்கு விண்ணப்பம் அனுப்பும் மாணவர்கள் படிக்கும் கலாசாலைகளின் அதிகாரிகள் சேர்ந்து டிசம்பர் மாதத்தில் பரிசுப் பரீக்ஷை யொன்றை ஸ்ரீ வைகுண்டத்தில் நடத்திப் பரிசு பெறத்தக்க இரண்டு மாணவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இவ் விஷயத்தில் பஞ்சாயத்து போர்டு தலைவரையும் ஊரில் பிரபலஸ்தராகவுள்ள சைவர் ஒருவரையும் கலந்துகொள்ளலாம். இவர்களில் பெரும்பாலோர் செய்யும் முடிவே ஏற்றுக்கொள்ளப்படும்.

7. ஒரு தடவை பரிசு பெற்றவர் மறுபடி பரிசுப் போட்டிக்கு வர அருகரல்லர்.

8. பரீக்ஷையின் முடிவையும், பரிசளிப்பதற்காகத் தேர்ந்தெடுத்த மாணவர்களின் பெயரையும் திருப்பனந்தாள் காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் கமிட்டிக்குத் தெரிவிக்க வேண்டும். கமிட்டியார் பரிசுத்தொகையை உரிய மாணவர்களுக்குச் சேர்ப்பிக்கும்படி கலாசாலை அதிகாரிகள் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்வார்கள்.

9. முதற் பரிசின் தொகை ரூ. 60; இரண்டாம் பரிசின் தொகை ரூ 50. ஜாஸ்தியான அம்சங்களை வாங்குபவருக்கு முதற் பரிசும், அடுத்தபடியான அம்சங்களை வாங்குபவருக்கு இரண்டாவது பரிசும் வழங்கப்பெறும்.

10. காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரிக் கமிட்டியார் வருஷந்தோறும் வரவுசெலவுக் கணக்கையும், பரிசு பெறுபவர்களுடைய பெயர்களையும், இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுக்கும், அவர்களுடைய வார்சுகளுக்கும் அனுப்பிவர வேண்டும்.

11. மூலதனம் ஏற்பட்ட நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் அதை மாற்றக்கூடாது.

XXVII. மதுரை திருமலை நாயக்கர் ஞாபகார்த்தத் திருமுறைப் பரிசுக் கட்டளை. மூலதனம் ரூ. 10,000 பத்தாயிரம்.

கீர்த்தி பொருந்தியவரும், தெய்வ பக்தி மிகுந்தவரும், தமிழிலக்கியம் கலை முதலியவற்றை வளர்த்தவரும், ஸ்ரீ மீனாட்சியம்மையிடத்து இடையறாது பக்தி பூண்டவரும் காசியில் ஸ்ரீ குமாரசாமி மடத்தை ஸ்தாபித்தருளிய ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை அரங்கேற்றும் பொழுது ஸ்ரீ மீனாட்சி அம்மையால் முத்தாரம் சூட்டப்பெற்ற அற்புதக் காட்சியைக் கண்டு வியந்து பாராட்டிச் சுவாமிகளிடத்துப் பெருமதிப்புக் காட்டிக் கௌரவித்தவரும், மக்கட்கு வழி காட்டுவதற்குரிய நீதிநெறி விளக்கம் எனும் நூலைச் சுவாமிகளால் இயற்றுவித்தவரும், மதுரையில் 1623 முதல் 1659 வரை அரசு செலுத்தியவருமாகிய திருமலை நாயக்கருடைய ஞாபகார்த்தமாகத் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்தக் கட்டளை ஏற்படுத்தப்பெற்றது. மதுரையிலுள்ள திருமலை நாயக்கர் மஹாலும், புது மண்டபமும் திருமலை நாயக்கரின் பொன்றாப்புகழுக்கு ஞாபகச்சின்னங்களாயுள்ளன. அத்தகைய பேரரசரை நினைவு கூர்தற்பொருட்டும் தேவாரத் திருமுறைகளைப் பரப்புதற்பொருட்டும் இக்கட்டளை நிறுவப்பெற்றது.

2. இதற்கு அமைத்திருக்கும் மூலதனம் ரூ. 10,000 பதினாயிரம், 3 சத வீதம் வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் நிதியை நிர்வகிக்கும் குழுவினரே இந்த நிதியையும் பரிபாலித்து வருவார்கள்.

3. தேவாரத்தை மிகவும் நன்றாகப் பாடக்கூடிய முதல் மூவருக்கு முறையே ரூ. 100, ரூ. 75, ரூ 70 ஆக ரூ. 245, இந்த மூலதனத்தின் வட்டியைக்கொண்டு ஆண்டுதோறும் பரிசாக அளிக்க வேண்டும். மிச்சப்படும் வட்டித் தொகையைத் தேவாரத்திரட்டை அச்சிடுதல் முதலியவற்றிற்குச் செலவு செய்யலாம். அதன் பிறகும் மிஞ்சும் தொகையை வட்டியைப் பெருக்கும் முறையில் மூலதனத்தோடு சேர்த்துக் கூடுமாயின் பரிசுத் தொகையை அதிகப்படுத்தப் பயன்படுத்தலாம்.

4. மதுரை முனிசிபல் எல்லைக்குள் இருக்கும் உயர்தரக் கலாசாலைகளில் நான்காவது முதல் ஆறாவது பாரங்களிலோ அல்லது அவற்றுக்குச் சமமாக வைக்கப்படும் வகுப்புக்களிலோ படிக்கும் மாணவர்கள் இந்தப் பரிசுப் போட்டிக்கு வரலாம். ஆண்டுதோறும்

பாடமாக ஏற்படுத்தப்படும் தேவாரப் பாசுரங்களை அவர்கள் பண் ஒன்றப் பாடுதல் வேண்டும்.

5. திருப்பனந்தாள் காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் கமிட்டியார் நான்கு வருஷங்களுக்கு ஒரு முறை சம்பந்தர் அப்பர் சுந்தரர் இவர்களுடைய பதிகங்களிலிருந்தும் பண்கள் எல்லாவற்றிலிருந்தும் ஐம்பது பாசுரங்களைப் பொறுக்கி எடுத்து அரும்பதவுரையுடன் ஒரு புத்தகமாக அச்சிட்டு வெளியிட வேண்டும். மறு நான்கு வருஷங்களுக்காகப் பொறுக்கும் பாசுரங்கள் இவையல்லாத பாசுரங்களாக இருக்கவேண்டும்.

6. பரிசளிப்புக்குரிய நிபந்தனைகள் வருமாறு:—

(i) மதுரை முனிஸிபல் எல்லைக்குள் இருக்கும் உயர்தரப் பாடசாலைகளில் 4, 5, 6-வது பாரங்களில் கல்விபயிலும் மாணவர்களுக்கு ஆண் பெண் ஜாதி மதவேறுபாடின்றி இந்தப் பரிசு அளிக்கப்படும்.

(ii) பரிசுப் போட்டிக்கு வரும் மாணவர்கள் ஐம்பது தேவாரப் பாசுரங்களையும் பாராமல் சரியான பண்ணில் நல்ல இசையுடன் பாடவேண்டும். இதற்காக உரிய பரீக்ஷை இரண்டு பிரிவை உடையது.

(a) முதற் பிரிவு : தேவாரப்பாசுரங்கள் ஐம்பதையும் பாராமல் பாடிப் பாசுரங்களின் பொருளையும் கருத்தையும் விளக்கமாகச் சொல்லவேண்டும். இதற்கு ஏற்பட்ட அம்சம் 50.

(b) இரண்டாவது பிரிவு : சரியான பண்ணில் பாசுரங்களின் கருத்தை நன்கு தெரிந்து அவற்றைப் பண் ஒன்ற இசையுடன் பாடவேண்டும். இதற்கு ஏற்பட்ட அம்சம் 50.

(iii) மாணவர்கள் தங்கள் பாடசாலைத் தலைமையாசிரியர் மூலம் பரிசுப் போட்டிக்குரிய விண்ணப்பங்களைப் பிரதி வருஷம் ஜுலை மாதம் 31-ந் தேதிக்குள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும். தத்தம் தலைமை ஆசிரியர்கள் மூலமாகவே பரிசுக்குரிய தேவாரத் திரட்டும் மாணவர்களுக்கு இலவசமாகக் கொடுக்கப்படும்.

(iv) அந்த அந்த ஸ்தல அதிகாரிகள் தத்தம் பாடசாலைகளில் பூர்வாங்கப் பரீட்சை யொன்று நடத்தி அதிற் சிறந்த ஐந்து மாணாக்கர்களை முடிவுப்பரீட்சைக்குத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். முடிவுப் பரீட்சை நடத்த ஒரு சங்கம் அமைக்கப்பெறும். மதுரை முனிசிபல் சேர்மன், பரீட்சைக்கு வரும் மாணவர் படிக்கும் ஒவ்வொரு ஹைஸ்

கூலின் தலைமை ஆசிரியரோ அல்லது பிரதிநிதியோ அப்பரீட்சைச் சங்கத்து அங்கத்தினராக இருப்பர். மதுரை ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்தின் பிரதிநிதி ஒருவரையும் அழைத்துக் கொள்ளலாம்.

7. ஒரு முறை பரிசு பெற்றவர் மறுமுறை போட்டிக்கு வரத் தகுதியற்றவ ராவர்.

8. பரீட்சையின் முடிவையும் பரிசளிப்பதற்காகத் தேர்ந் தெடுத்த மாணவர்கள் பெயரையும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியின் கமிட்டிக்குத் தெரி விக்கவேண்டும். ஷெ. கமிட்டியார் பரிசுத்தொகையை உரிய மாணவர் களுக்குச் சேர்ப்பிக்கும்படி அந்த அந்தக் கலாசாலை அதிகாரிகள் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்வார்கள்.

9. முதல் பரிசுத் தொகை ரூ. 100; இரண்டாம் பரிசு ரூ. 75; மூன்றும் பரிசுத் தொகை ரூ. 70 ரொக்கமாகக் கொடுக்கப்படும். அதிகமான அம்சம் வாங்குபவருக்கு முதற்பரிசும், அதற்கடுத்த அம் சம் வாங்குபவருக்கு இரண்டாவது பரிசும் அற்கும் அடுத்த அம்சம் வாங்குபவருக்கு மூன்றுவது பரிசும் வழங்கவேண்டும். மதுரையில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தில் கல்யாண மண்டபத்தில் பரிசுத்தொகையை வழங்கவேண்டும்.

10. காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரிக் கமிட்டியார் ஆண்டுதோறும் வரவுசெலவுக் கணக்கையும் பரிசு பெறு பவர்களுடைய பெயர்களையும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர் களுக்கும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களுக்கும் அனுப்பி வரவேண்டும்.

11. இதன் மூலதனத்தை மேலே குறித்தபடியல்லாத வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கலாகாது.

XXVIII ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம். சொத்தின் மதிப்பு ரூ. 1,00,000 ஒரு லட்சம் ரூபாய். ஸ்ரீ வைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி முதலிய தலங்களிலுள்ள மாணவி களுக்கு.

திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் (ஸ்ரீகாசியில் குமாரசுவாமி மடத்தை ஸ்தாபித்தவர்) ஐந்து வயதில் ஊமை நீங்கிக் கந்தர்கலிவெண்பாப் பாடி அருள ஸ்ரீ செந்திலாண்டவன் கருணை பாலித்தமையை நினைந்து உய்தற்பொருட்டு ஸ்ரீ செந்திலாண்டவன் திருப்பெயரால், இந்தத் தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் ஏற்படுத்தப் பெற்றது.

2. இத்தருமம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவதரித்த தலம் ஆகிய 1. ஸ்ரீவைகுண்டம் 2. 5-வயதில் திருவருள் பெற்ற தலம் ஆகிய திருச்செந்தூர். 3. இந்த விரண்டு தலங்களுள்ள ஜில்லாவின் தலைநகரமாகிய திருநெல்வேலி — இம் மூன்று ஸ்தலங்களிலுள்ள ஹைஸ்கூல், ஹையர் எலிமெண்டரி பாடசாலை இவைகளில் மூன்றுவது பாரம் முதல் 6-வது பாரம் முடிய (III, IV, V & VI forms) அல்லது அவற்றுக்குச் சமமாக வைக்கப்படும் வேறு வகுப்புக்களில் படிக்கும் கல்வியில் ஊக்கமுள்ள மிக வறிய, தமிழ் கற்கும் மாணவிகளுக்கு மத வேறுபாடின்றிச் சாப்பாட்டு உபகார நிதி (ஸ்டைபெண்டு) அளிப்பதற்காக ஏற்படுத்தப் பெற்றுள்ளது.

3. தஞ்சாவூர் ஜில்லா, கும்பகோணம் தாலுக்கா, உக்கரை வட்டம் வடபாதி கிராமத்தில் உள்ள ஏக்கர் 157 செண்டு 13 (ஏக்கர் நூற்று ஐம்பத்தேழு செண்டு பதின்மூன்று) நன்செய் புன்செய் நிலங்கள் மனைகள் வகையறாக்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தினால் இந்தத் தருமம் நடத்தப்பெறும். இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பெயரில் பட்டா மிராசுடன் அவர்களது அனுபவத்திலிருப்பவை. சொத்தின் மதிப்பு ஒரு லட்சம் ரூபாய். வருஷ வருமானம் ரூ. 5,000; ரூபாய் ஐயாயிரம்.

4. இந்தச் சொத்துக்கள் இனியும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அனுபவத்திலும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களுடைய அனுபவத்திலும் இருந்து வரவேண்டியது.

5. சொத்தின் வருஷாந்தர வரும்படியில் சீர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திச் செலவுகள், கிராம சமுதாயம், மராமத்துச் செலவுகள், கிராம தேவதை உற்சவச் செலவுகள் முதலியன போக மிஞ்சும் தொகை இந்தத் தருமத்துக்காகப் பயன்படுத்தப்பெறும். விவரங்கள் பின்வருமாறு:—

i. மத, வகுப்புப் பேதமின்றி இந்தச் சாப்பாட்டு உபகார நிதி (ஸ்டைபெண்டு) அளிக்கப்பெறும்.

ii. ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி இம் மூன்று ஊர்களின் யூனியன், அல்லது முனிசிபல் எல்லைக்குள் இருக்கும் ஹைஸ்கூல், ஹையர் எலிமெண்டரி பாடசாலைகள் இவைகளில் மூன்றுவது பாரம் முதல் ஆறுவது பாரம் முடியத் தமிழ்மொழி கற்கும் ஏழைமையும், தகுதியும் உள்ள மாணவிகளுக்கு மட்டும் அளிக்கப்பெறும்.

iii. உதவி பெறும் மாணவிகள் கந்தர்கலிவெண்பாவைப் பொருள் உணர்ச்சியுடன் மனப்பாடமாக ஒப்பித்தல் வேண்டும்.

iv. இந்தச் சாப்பாட்டு உபகார நிதி பெறும் மாணவிகளை, ஷை மூன்று ஊர்களிலுள்ள அந்த அந்த யூனியன் போர்டோ அல்லது முனிசிபல் சபையாரோ பாடசாலைகளின் தலைமை ஆசிரியர்களைக் கலந்து கொண்டு தேர்ந்தெடுப்பர். சாப்பாட்டு உபகார நிதியின் தொகையும் ஷை நிதியின் எண்ணிக்கைகளும் (number of stipends) நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் ஆண்டுதோறும் தீர்மானிக்கப்படும்.

v. ஷை உபகார நிதி ஒவ்வொரு வருஷத்துக்கு மட்டும் அளிக்கப்பெறும்.

vi. ஒரு வருஷம் அவ்வுதவி பெற்றவர், கல்வியறிவு ஒழுக்கம் முதலியவற்றுள் திருப்திகரமாக நடந்து ஆண்டுப் பரீட்சையிலும் தேறினால் அடுத்த ஆண்டும் அவ்வுபகாரச் சம்பளம் அளிக்கப்படலாம். உதவி பெறும் மாணவி வருஷப் பரீட்சையில் தேறுவிடில் மறுவருஷம் உதவி பெறுவதற்கு அருகதையுடையவரல்லர்.

6. ஷை என்டௌமெண்டிலிருந்து கிடைக்கும் நிகர வருமானத்திலிருந்து ஒவ்வோர் ஆண்டும் ரூ. 5,000 ரூபாய் ஐயாயிரம் விதம் உதவி மூலதனங்கள் ஏற்படுத்தப்பெறும். (Auxiliary capitals) அந்த உதவி மூலதனங்கள் அதிக வட்டி வரக்கூடிய சர்க்கார் பிராமிசரி நோட்டுக்களில் நமது பெயராலேயும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலுமே முதலீடு செய்து வைக்கப்படும். முதல் முதலாக ஸ்ரீவைகுண்டம், பின் திருச்செந்தூர், அதற்குப் பின் திருநெல்வேலி என்ற வரிசையில் இந்த உதவி மூலதனங்கள் ஒதுக்கிவைக்கப்பெறும்.

7. உதவி மூலதனங்கள் வட்டித் தொகையிலிருந்து மேற்கண்ட ஒவ்வோர் ஊரிலும் படிக்கும் மாணவிகளுக்குச் சாப்பாட்டு உபகாரநிதிகள் ஸ்டைபெண்டு மேற்கூறியவாறு ஒவ்வோர் ஆண்டும் கொடுத்துவரப்பெறும்.

8. இவ்வாறு மூன்று ஊர்களுக்கும் முதல் உதவி மூலதனங்கள் ஏற்படுத்தப்பெற்ற பிறகு, இந்த எண்டௌமெண்டிலிருந்து

கிடைக்கும் வருமானம் மேற்சொன்ன வரிசையிலேயே அந்த அந்த ஊர்களின் தேவைக்குத் தக்கவாறு அதிகப்படியாக உதவி மூலதனத்தைப் பெருக்குவதற்கு உபயோகிக்கப்பெறும். இவ்வாறு நம்மாலும் நம் பின்வரும் உரிமையுள்ளவர்களாலுமேயே இந்தத் தருமம் பரிபாலனஞ் செய்து வரப்பெறும்.

9. அந்த அந்த ஊர் முனிசிபல் சபையார் தேர்ந்தெடுக்கும் இந்த உபகார நிதி பெறும் மாணவிகளின் பெயர், படிக்கும் வகுப்பு, தலைமை ஆசிரியர் அத்தாட்சியுடன் நமக்கும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களுக்கும் தெரிவிக்கப்பெறவேண்டும்.

10. ஒவ்வோர் ஆண்டும் உபகார நிதிகள் அந்த அந்த ஊர் யூனியன் அல்லது முனிசிபல் போர்டுகள் மூலம் அனுப்பப்பெறும்.

11. இந்த எண்டௌமெண்டை மேற்கண்ட தருமத்திற்கு அல்லாது வேறு எதற்கும் உபயோகிக்கக்கூடாது.

குறிப்பு:—இந்தப் பத்திரம் ரூ. 1500 ஜெனரல் ஸ்டாம்பில் எழுதப்பெற்று, 28-1-48-ல் திருவிடைமருதூர் சப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் ரிஜிஸ்தர் செய்யப்பெற்றுள்ளது. (1நெ. புஸ்தகம் 981 வால்யூம் 39 to 42 பக்கங்களில் 1948ம் வருஷம் 172ம் நெம்பர் தஸ்தாவேஜி.)

XXIX. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம். சொத்தின் மதிப்பு ரூ: 1,50,000. ஸ்ரீ காசி, குடந்தை, மதுரை நகரங்களிலுள்ள மாணவிகளுக்கு.

இந்தத் தருமம் ஸ்ரீ காசியில் குமாரசுவாமி மடத்தை ஸ்தாபித்தருளிய ஆதி குமரகுருபர சுவாமிகளுக்குச் செந்திலாண்டவன் திருவருள் பாலித்தமையை நினைந்து உய்தற்பொருட்டு, திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால், செந்திலாண்டவன் திருப்பெயரால் ஏற்படுத்தப்பெற்றது.

ஐந்து வயதில் செந்திலாண்டவனருளால் ஊமை நீங்கப்பெற்றுக் கந்தர் கலிவெண்பாப் பாடியருளியும், மதுரையில் ஸ்ரீ மீனாட்சியம்மை மீது பிள்ளைத் தமிழ் பாடி அம்மையாரால் முத்தாரம் அணியப்பெற்றும், திருமலை நாயக்க மன்னன் வேண்ட மன்னன் முதல் உலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் உலகறிவு ஊட்டுவதற்கு நீதி நெறி விளக்கம் அருளியும், தருமையும் கமலையும் விரிதமிழ்க்கூடலும் திருநகராய் ஞான அரசு வீற்றிருந்த மாசிலாமணி

தேசிகராயரைக் கண்டு ஆசிரமம் பெற்றும், பண்டார மும்மணிக் கோவை பகர்ந்தும், தில்லை திருவாரூர் தரிசித்து மும்மணிக் கோவை நான்மணிமாலை நவின்றும், காசி சென்று தமிழர்கள் பிற மொழிகளையும் கற்றல் வேண்டுமென அறிவுறுத்துவான் வேண்டிச் சகலகலாவல்லிமாலை பாடியருளியும், உயிருள்ள சிங்கத்தின் மீதேறி முகலாய மன்னர் ஔரங்கசீப் பாதுஷாவைக் கண்டு அன்னவரால் உயர்மதிப்புப் பெற்று அம்மன்னர் உதவியால் ஸ்ரீ விசுவேசுவரர் ஆலயத்தை விளக்கமுறச் செய்தும், கேதார கட்டத்தில் அறச்சாலை நிறுவியும் இன்னோரன்ன செயற்கரிய பணிபல செய்தருளிய முனிவர் பெருமான் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் ஆவார்கள்.

2. இத்தருமம் ஸ்ரீகாசி சர்வகலாசாலையிலும், மதுரை கும்பகோணம் நகரங்களின் எல்லைக்குள்ளிருக்கும் ஹைஸ்கூல்களிலும், கல்வி கற்கும் ஏழைமையும் தகுதியும்வாய்ந்த மாணவிகளுக்குச் சாப்பாட்டு உபகார நிதி அளிக்கும்பொருட்டு நிறுவப்பட்டது.

3. தஞ்சை ஜில்லா கும்பகோணம் தாலூகா உக்கரை வட்டத்திலுள்ள உக்கரை வகையரா கிராமங்களிலுள்ள 238 ஏக்கர் 38 செண்டு நன்செய் புன்செய் நத்தம் வகையராக்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தால் இத் தருமம் நடத்தப்பெறும். இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பெயரில் பட்டா மிராசுடன் அவர்கள் அனுபவத்திலிருப்பவை. சொத்தின் உத்தேச மதிப்பு ஒன்றரை லக்ஷம் ரூபாய். உத்தேச வருஷ வருமானம் ரூ. 7,000.

4. இந்தச் சொத்துக்கள் இனியும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் அனுபவத்திலும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களுடைய அனுபவத்திலும் இருந்து வரவேண்டியது.

5. சொத்தின் வருஷாந்தர வரும்படியில் சர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திச் செலவுகள், கிராம சமுதாயம், மராமத்துச்செலவுகள், கிராம தேவதை உற்சவச் செலவுகள் முதலியனபோக மிஞ்சும் தொகை மேலே 2-வது பாராவில் கண்டபடியுள்ள தருமத்துக்காகப் பயன்படுத்தப்பெறும். விவரங்கள் பின்வருமாறு:

6. ஸ்ரீ காசி சர்வகலாசாலை.

i. ஸ்ரீகாசி சர்வகாசாலையிலுள்ள ஏழைமையும் தகுதியும்வாய்ந்த ஆர்ட்ஸ் கோர்ஸில் (Arts Course) வாசிக்கும் மாணவிகளுக்கு அளிக்கப்படும். அவர்கள் சைவ சித்தாந்தத்தை இஷ்டபாடமாக

வாசித்தல் வேண்டும். சித்தாந்த பாட மாணவிகள் இல்லையேல் இதர சமய பாடங்களைப் படிப்பவர்களுக்குக் கொடுக்கப்படும். அவ் வகுப்பிலும் மாணவிகள் இல்லாமற்போகில் ஆர்ட்ஸ் கோர்ஸில் இதர வகுப்புக்களிலுள்ள மாணவிகளுக்கு அளிக்கப்படும்.

ii. இவ்வாறு ஷை சர்வகலாசாலை உப அத்தியக்ஷகர் அந்த அந்தத் தலைமை உபாத்தியாயர்களைக் கலந்துகொண்டு மாணவிகளைப் பொறுக்கி எடுப்பர்.

iii. உபகார நிதியின் தொகையும், அளிக்கப்படும் மாணவிகளின் எண்ணிக்கையும் உப அத்தியக்ஷகர் அவர்களே நிச்சயிப்பார்.

iv. மத, வகுப்புப் பேதமின்றி இந்தச் சாப்பாட்டு உபகாரநிதி (ஸ்டைபெண்டு) அளிக்கப்பெறும்.

v. படிப்பின் திறமையையும், ஒழுக்கத்தையும், ஆண்டுப் பரீட்சையில் தவறாது தேர்ச்சியடைவதையும் நோக்கி இந்த உபகாரச் சம்பளம் தொடர்ந்து அளிக்கப்படலாம்.

vi. ஓராண்டுப் பரீட்சையில் தவறிவிடின் உபகாரநிதி தவறிய மாணவிக்கு அளிக்கப்படமாட்டாது.

vii. இந்தத் தருமத்தின் வருமானத்திலிருந்து முதல் இரண்டு ஆண்டுகளுக்கும் ஆண்டு ஒன்றுக்கு ரூ 7, 000 வீதம் தொகைகள் ஸ்ரீகாசி சர்வகலாசாலைக்கு அனுப்பப்பெறும். சர்வகலாசாலையார் ஷை தொகைகளை ரூ. 7,000 வீதம் உதவி மூலதனங்களாக ஏற்படுத்தி வட்டி தரும் சர்க்கார் கடன் பத்திரங்களில் சேமித்து வைப்பர். இவ்வாறாக ஒவ்வோர் இரண்டு ஆண்டுகளுக்கும் ஷை சர்வகலாசாலைக்குத் தொகை அனுப்பிவரப்பெறும்.

viii. ஆண்டுதோறும் உபகாரச் சம்பளம் பெறும் மாணவிகள் பெயர், வகுப்பு முதலிய விவரங்களும் வருஷாந்தர வரவுசெலவுக் கணக்கும் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களுக்கும் சர்வகலாசாலையார் அனுப்பிவருதல் வேண்டும்.

ix. சர்வகலாசாலையார் ஷை நிபந்தனைகளுக்குக் கொடுக்கும் சம்மதியின் பேரிலேயே உதவி மூலதனங்களுக்குத் தொகைகள் அனுப்பிவரப் பெறும்.

## 7. மதுரை, கும்பகோணம் ஹைஸ்கூல்கள்.

i. மதுரை, கும்பகோணம் இரு நகர எல்லைக்குட்பட்ட ஹைஸ்கூல்களில் 4 முதல் 6-ம் பாரங்களில் படிக்கும் தகுதியும்

ஏழைமையும் உடைய மாணவிகளுக்குச் சாப்பாட்டு உபகாரநிதி அளிக்கப்பெறும்.

ii. ஷை உபகார நிதி பெறும் மாணவிகள் கந்தர்கலிவெண் பாவைத் தவறாது பாராயணம் செய்யவேண்டும்.

iii. இந்த உபகாரநிதி பெறும் மாணவிகளை முனிசிபல் கவுன் சில்கள் அந்த அந்த ஹைஸ்கூல் தலைமையாசிரியர்களைக் கலந்து கொண்டு தேர்ந்தெடுக்கும்.

iv. கொடுக்கப்படும் உபகாரநிதியின் எண்ணிக்கையும், தொகை யும் இந்தத் தரும ஸ்தாபகரவர்களாலும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் நிச்சயிக்கப்பெறும்.

v. மத வகுப்புப் பேதமின்றி இந்தச் சாப்பாட்டு உபகார நிதி தகுதியுள்ள மாணவிகளுக்குக் கொடுக்கப்பெறும்.

vi. தவறாது ஆண்டுப் பரீட்சையில் தேர்ச்சிபெறுதல், ஒழுக்கம் இவற்றின் காரணமாகத் தொடர்ந்து இந்த உபகார நிதி அளிக்கப் படலாம்.

vii. ஓராண்டுப் பரீட்சையில் தவறிவிடின் ஷை மாணவிக்கு மறுமுறை இந்த உபகார நிதி அளிக்கப்படமாட்டாது.

viii. ரூ. 7,000 வீதம் கொண்ட உதவி மூலதனத் தொகைகள் மதுரை, கும்பகோணம் இரண்டு ஊர்களுக்கும் ஏற்படுத்தப்பெற்று அவைகள் இந்தத் தரும ஸ்தாபகரவர்கள் பெயரிலும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்கள் பெயரிலும் சர்க்கார் கடன் பத்திரங் களில் சேமித்து வைக்கப்படும். இந்த உதவி மூலதனங்களிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகையால் சாப்பாட்டு உபகார நிதிகள் அளிக்கப்பெறும். இந்தத் தருமம் ஏற்படுத்தப்பெற்றதிலிருந்து மூன்றாவது ஆண்டில் மதுரைக்கும், நான்காவது ஆண்டில் கும்பகோ ணத்துக்கும் உதவி மூலதனங்கள் ஏற்படுத்தப்பெறும். இதைப் போன்றே இரண்டாவதாக உள்ள பகுதியில் 7-வது ஆண்டு மதுரைக்கும் 8-வது ஆண்டு கும்பகோணத்துக்கும் கிடைக்கும். இடையிலுள்ள இரண்டு ஆண்டுகளும் ஸ்ரீ காசி மாணவிகளுக்காக அனுப்பப்பெறும்.

ix. இந்த உபகார நிதி பெறும் மாணவிகள் பெயர், படிக்கும் வகுப்பு விவரங்கள் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுக் குப் பின் வரும் உரிமையுள்ளவர்களுக்கும் அறிவிக்கப் பெற வேண்டும்.

8. இந்தத் தருமம் நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலுமே நடத்தப்பெற்று வரும்.

9. இந்த எண்டௌமெண்டை மேற்கண்ட தருமத்திற்கு அல்லாது வேறு எதற்கும் உபயோகிக்கக்கூடாது.

*Note.*—The above deed of endowment has been registered at Tiruvidamarudhur Sub Registrar's Office on 9th February 1948 (Rs. 2520 General stamp) as Document No. 225 of 1948, Book No. I Volume No. 968 pages 91 to 103.

XXX. ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தி அடிகளின் ஞாபகார்த்த அன்னதானக் கட்டளை ரூ. 5,000.

அஹிம்சை, உண்மை முதலிய குணங்களே உருவாக அவதரித்தவரும், தமக்கென வாழாது உலக சமாதானத்துக்கென்றே அல்லும் பகலும் உழைத்தவரும், இந்திய மக்களின் பிதாவாகக் கொண்டாடப்படுபவருமாகிய மஹாத்மா காந்தி அடிகளின் ஞாபகார்த்தமாக அவர் முக்தி அடைந்த தினமாகிய ஜனவரி மாதம் 30-ந் தேதி அன்று ஆண்டுதோறும் ஸ்ரீ காசியில் பிராம்மண போஜனம், மஹேசுவரபூஜை, ஏழைகளுக்கு அன்னதானம் செய்வதற்காக இத் தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளவர்களால் ஏற்படுத்தப்பெற்றுள்ளது.

2. இந்தத் தருமத்தின் மூலதனம் 3 சத வீதம் வட்டியுள்ள ரூ. 5,000 ரூபாய் ஐயாயிரம் சர்க்கார் கடன் பத்திரமாயுள்ளது.

3. இந்தச் சர்க்கார் கடன் பத்திரத்திலிருந்து கிடைக்கும் வட்டித் தொகை வருஷந்தோறும் மஹாத்மா காந்தியடிகள் பரிபூர்ணமெய்திய தினமாகிய ஜனவரி 30-ந் தேதியன்று ஸ்ரீ காசியில் நமது சத்திரத்தில் பிராம்மண போஜனம், மஹேசுவர பூஜை, ஏழைகளுக்கு அன்னதானம் முதலியவைகளுக்குச் செலவழிக்கப்பெறும்.

4. அந்த அந்த வருஷத்திலுள்ள விலைவாசிக்குத் தக்கவாறு ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாபடி அன்னதானம் நடத்தப்பெறும்.

5. இந்தத் தருமம் ஒவ்வொரு வருஷத்திலும் நம்மாலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும். இந்தத் தரும நிதி வேறெந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப்படமாட்டாது.

XXXI. ஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் ஞாபகார்த்தத் திருக்குறள் பரிசுக் கட்டளை.— மூலதனம் ரூ. 3500.

பெருந்தமிழ்ப் புலவரும், கவிஞரும், எழுத்தாளரும், தமிழ் இலக்கிய வளர்ச்சி குறித்து வாழ்நாள் முழுவதும் இடையறாமல் அருந்தொண்டு புரிந்தவருமாகிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் ஞாபகார்த்தமாகவும், மாணவிகளிடையே திருக்குறட் பயிற்சி மிகும் பொருட்டும் இந்தக் கட்டளை திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் ஸ்வாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது.

2. இதற்குரிய மூலதனமாகிய ரூ. 3500/- ரூபாய் மூவாயிரத்தைந்நூறும் 3 சதவிகிதம் வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இந்த நிதி சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் பிரின்ஸிபாலின் பரிபாலனத்தில் இருக்கும்; அவர் காலேஜில் தமிழ்ப் பகுதித் தலைவரோடு கலந்து ஆலோசித்து இவ்விஷயத்தில் ஆவன செய்வார்.

3. ஆண்டுதோறும் மூலதனத்துக்குக் கிடைக்கும் வட்டியைக் கொண்டு முறையே ரூ. 70, ரூ. 30 கொண்ட இரண்டு பரிசுகள் வழங்கப்பெறும். (வட்டி வரவு நூறு ரூபாய்க்குக் குறைவாக எப்போதேனும் இருக்குமானால் 7 : 3 என்ற விகிதத்தில் இந்தப் பரிசுகள் அமையும்.) ஒவ்வொரு வருஷமும் ஜூலை முதல் தேதிக்குள் ஷை காலேஜ் பிரின்ஸிபால், திருவள்ளுவரால் இயற்றப்பெற்ற 1330 திருக்குறட்பாக்களில் 600க்குக் குறையாத குறட்பாக்களைத் தேர்ந்தெடுத்துப் பரீட்சைக்குரியனவாக அமைப்பார். இவற்றில் வாய்மொழியாகவும் எழுத்து மூலமாகவும் நடைபெறும் பரீட்சையில் முதலிலும் அடுத்தபடியும் தேர்ச்சிபெறும் மாணவிகளுக்கு முறையே அந்த இரண்டு பரிசுகளும் வழங்கப்பெறும். பரிசுத்தொகை போக எஞ்சியது இந்த விஷயத்தில் ஏற்படும் செலவுக்கு உபயோகமாகும். ஒவ்வொரு வருஷமும் ஜனவரி மாதத்தில் இந்தப் பரீட்சை சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் பிரின்ஸிபாலின் மேற்பார்வையில் ஷை காலேஜ் தமிழ்ப் புரொபஸரால் நடத்தப்பெறும்; சென்னை நகர எல்லைக்குள் உள்ளனவும் சென்னை யூனிவர்ஸிடியோடு இணைக்கப்பட்டனவுமாகிய காலேஜுகளில் வாசிக்கும் மாணவிகளுக்கு மாத்திரம் எந்த மதம், ஜாதி, கொள்கையைச் சார்ந்தவராயினும் இப்பரீட்சையில் சேரும் உரிமை உண்டு.

4. இந்தப் பரிசு ஒவ்வோராண்டும் டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் ஜன்ம தினமாகிய பிப்ரவரி மாதம் 19-ஆம் தேதி

யிலோ அல்லது பிரின்ஸிபாலால் தக்கதென்று குறிக்கப்பெறும் வேறு நாளிலோ, சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜில் எழுப்பியுள்ள ஐயரவர்களின் திருவுருவச் சிலைக்கு முன்போ அல்லது பிரின்ஸிபால் குறிக்கும் வேறு இடத்திலோ வழங்கப்பெறும்; பிரஸிடென்ஸி காலேஜ் பிரின்ஸிபாலின் தீர்மானமே முடிவானது.

5. ஒரு வருஷம் பரிசு பெற்றவர்கள் மீட்டும் பெறும் தகுதியுடையார் ஆகமாட்டார்கள்.

6. ஆண்டுதோறும் இப்பரிசுகளைப் பெற்றவர்களின் பெயர்களும் இவ்விஷயத்தில் அவ்வருஷம் செலவான தொகையின் விவரமும் ஸ்தாபகருக்கும் அவருடைய வாரிசுகளுக்கும் அறிவிக்கப் பெறும். எந்த ஆண்டிலேனும் இந்தப் பரிசுகளில் ஒன்றோ இரண்டுமோ தக்க காரணங்களால் வழங்கப்பெறாமல் போகுமானால், அந்தக் காரணங்களை எழுத்துமூலம் பதிவு செய்துவிட்டு, பரிசுத் தொகை மூலதனத்தோடு சேர்க்கப்பெறும்.

7. இந்தக் கட்டளை குறிப்பிட்ட காரியத்திற்கல்லது வேறு விஷயத்தில் செல்வழிக்கப் பெறமாட்டாது.

XXXII. குடந்தையில் காந்தியடிகள் நினைவுப் பசுப் பரிசு ரூ. 1000.

மிகவும் நன்றாகப் பராமரிக்கப்பெற்ற பசு ஒன்றுக்கு ரூ. 30, ஆண்டுதோறும் பரிசளிப்பது.

XXXIII. அரியநாயகிபுரத்தில் காந்தி அடிகள் நினைவு ஹரிஜன் மாணவர்கள் உபகாரநிதி ரூ. 3,000 ரூபாய் மூவாயிரம். ஸ்ரீ ஆர். எ. சாஸ்திரிகள் அவர்களால் நிறுவப்பெற்ற கல்லூரி மாணவர்களுக்கு அளிக்கப்பெறும்.

XXXIV. ஸ்ரீ வைகுண்டத்தில் மகேசுவர பூஜை.

1948-ம் வருஷம் மார்ச்சு மாதம் 6-ம்தேதி கும்பகோணம் தாலூக்கா திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் எழுதிவைத்த டிரஸ்டு செட்டில்மெண்டு பத்திரம்.

2. திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அவதரித்த ஸ்தலத்தில் நித்திய மகேசுவர

பூஜை நடைபெறுவதற்காக இந்தச் செட்டில்மெண்டு எழுதிவைக்கப் பெற்றுள்ளது.

3. இதன் ஷெட்டியூலில் விவரிக்கப்பெற்றிருக்கும் நமக்குச் சொந்தமாய் நாம் சர்வசுதந்தரத்துடன் அனுபவித்து வருகிற திருப்பனந்தாள் வட்டம் திருப்பனந்தாள் கிராமத்தில் மேலவீதி, கீழ் சிறகு மனையிலுள்ள, நம்மால் புதிதாகக் கட்டப்பெற்றுள்ள எட்டுக் கடைகளிலிருந்து கிடைக்கும் வருஷ வருமானத்தில் ஒரு பாதித் தொகையை மட்டில் தை மகேசுவரபூஜைத் தருமம் நடைபெற்று வரும்பொருட்டுச் செலவழிக்கப்பெறும்.

4. மேலே 3-வது பாராவில் கண்டபடி தை தருமத்துக்காக ஒரு பாதி ஒதுக்கி வைக்கப்பெற்ற பிறகு, பாக்கித் தொகை ஷை கடைகளில் அப்போதைக்கப்போது ஏற்படும் ரிப்பேர்களைச் செய்வதற்கும், ஷை கடைகளுக்கு வரிகள் செலுத்த வேண்டியிருந்தால் அவைகளைச் செலுத்துவதற்கும், அக்கடைகளில் விருத்தியாம்சம் செய்யவேண்டியிருந்தால் அவைகளைச் செய்வதற்கும் உபயோகிக்கப் பெறும்.

5. இந்தச் செட்டில்மெண்டு பத்திரத்தில் காணும் சொத்து நமது பேரிலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்கள் பேரிலுமே இருந்துவரும்.

6. இந்தச் சொத்தின் வருமானம் மேலே விவரிக்கப்பெற்றிருக்கிற செலவுகளைத் தவிர வேறெந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப்படமாட்டாது.

7. இந்த டிரஸ்டு செட்டில்மெண்டு பத்திரத்தின் பெறுமானம் ரூ. 10,000 பதினாயிரம்.

அசலுக்குச் சரியான நகல்.

குறிப்பு.—மேலே கண்ட பத்திரம் திருவிடைமருதூர் சப் ரிஜிஸ்திரார் ஆபீசில் ரூ. 150—ஸ்டாம்பில் எழுதி 6—3—48ந்தேதி ரிஜிஸ்தர் செய்யப்பெற்றிருக்கிறது.

35. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி ஆலயத்தில் வெள்ளிக்கவச உபயம் ரூ. 4,000

36. விஷ்ணுபுரம் உயர்தரக் கலாசாலையில் ஸ்ரீகாந்தி நினைவு படிப்பக நிதி ரூ. 1,000

37. திருக்குடந்தையில் ஸ்ரீ ராஜாஜி அபிராமி அந்தாதி பரிசுக்கட்டளை ரூ. 3,500

38. திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதி பரிசுக்கட்டளை ரூ. 3,500

39. திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர் பந்தல் நிதி ரூ. 3,500

40. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் படிப்பக நிதி ரூ. 3,500

41. ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் (சிதம்பரம் மாணவர்களுக்கு) ரூ. 35,000

42. ஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள் நினைவு அன்னதானம் (சிதம்பரம்) ரூ. 12,000

43. ஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள் நினைவு அன்னதானம் (இராமேசுவரம்) ரூ. 3,500

44. ஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள் நினைவு படிப்பகக் கட்டிடம் (ஸ்ரீவைகுண்டம்) ரூ. 5,000

45. பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை (பிரதம மந்திரியிடம்) ரூ. 5,000

46. பண்டிட் ஜவஹர்லால் நேரு படிப்பக நிதி (அரியநாயகிபுரம்) ரூ. 3,500

47. ஸ்ரீகாசி கேதார மந்திரத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ரூ. 5,000